# ஒரிஜினல் மனிதன்

**ஆர்.வி.பதி**



**ஹா**லில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள் வாசுவும் மைதிலியும். வெளிறிப் போன முகத்துடன் நடக்கத் தெம்பில்லாமல் வீட்டினுள் நுழைந்தாள் புவனா.

''என்ன புவனா ஏன் என்னமோ போல இருக்கே?''

சிறிது ஆசுவாசப்படுத்திக் கொண்ட புவனா மெள்ள பேச ஆரம்பித்தாள்.

''பிரண்டு கல்யாணத்துக்குப் போக, காலையிலே அண்ணியோட செயினை வாங்கிப் போட்டுக்கிட்டுப் போனேன். வழியிலே ஒருத்தன் மோட்டார் சைக்கிள்லே வந்து செயினை அறுத்துக்கிட்டுப் போயிட்டான்.''

இதைக் கேட்ட மைதிலி அதிர்ந்தாள். வாசு சிரித்தவாறே சொன்னான்.

''இதுக்கா இப்படி பயந்து போயிருக்கே. போனாப் போகுது. கவலைப்படாதே. உள்ளே போய் ரெஸ்ட் எடு புவனா.''

புவனாவிற்குப் போன உயிர் திரும்பி வந்தது போலிருந்தது. உள்ளே போனாள்.

''என்னங்க அது மூணு சவரன் செயின். போலீஸ்லே ஒரு புகார் கொடுங்க.''

''தேவையில்லே மைதிலி.''

''என்ன பேசறீங்க நீங்க. உங்க தங்கச்சி தொலைச்சிட்டதாலே கண்டுக்காம விட்டுட்டீங்க. இதே நான் தொலைச்சிருந்தா என்னை அம்மா வீட்டுக்குப் போய் வேறே செயினோட வான்னு இந்நேரம் அனுப்பியிருப்பீங்க.''

கோபமாகப் பேசினாள் மைதிலி.

கோபப் படாமல் பேசினான் வாசு :

''நீ நினைக்கிற மாதிரி அது ஒரிஜினல் செயின் இல்லே.''

''என்னங்க சொல்றீங்க?''

''ஆமாம் மைதிலி. மூணு மாசத்துக்கு முன்னாலே அவசரமா இரண்டாயிரம் தேவைப்பட்டப்போ உன் செயினை அடகு வைக்கப் பணம் வாங்கலாம்னு மார்வாடி கடைக்குப் போனேன். அதை வாங்கிப் பார்த்த மார்வாடி 'இது ஒரிஜினல் இல்லே; கவரிங் சார்'னு சொன்னான். நானும் அதை உன்கிட்டே சொல்லாம, பணம் வேறே வழி யிலே புரட்டிட்டேன்னு சொல்லி, செயினை உன்கிட்டே திருப்பிக் குடுத்திட்டேன். உங்கப் பாவைப் பத்தி எனக்கு நல்லாத் தெரியும் மைதிலி. அவரு தங்கமானவரு. பொண்ணு கல்யாணம் நின்னு போயிடும்ங்கிற பயத் திலே இது மாதிரி செய்துட்டாரு. நமக்கு இந்த உண்மை தெரிஞ்ச விஷயத்தை அவர்கிட்டே சொல்ல வேணாம் மைதிலி. என்னோட தங்கை புவனா செயினை தொலைச்சதாவே இருக்கட்டும்.''

''என்னை மன்னிச்சிடுங்க அவசரப்பட்டு ஏதேதோ பேசிட்டேன்...'' என்றாள் மைதிலி குரல் தழுதழுக்க.

**- இன்லண்ட் லெட்டர் சிறுகதை**



## அட, அப்படியா!

# கனவுலகில் ஏழு ஆண்டுகள்

!! கனவுகள் ஏன் ஏற்படுகின்றன...? இதற்குத் தெளிவான விடை இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை.

கனவுகள் பற்றிய ஆராய்ச்சிகளில் ஈடுபட்டுள்ளோர், அவை எல்லோருக்குமே தோன்றும் என்கிறார்கள். கனவுகளை இரண்டு விதமாகப் பிரிக்கிறார்கள் : ஒன்று: தூங்க ஆரம்பிக்கும் போது ஏற்படும் முன் தூக்கக் கனவுகள். நடந்து முடிந்த தினத்தின் நிகழ்வுகளை மனம் அசை போடுவது போன்ற இலேசான கனவுகளே இச் சமயத்தில் ஏற்படும். பெரும்பாலோருக்கு விழித்தெழும் போது இக் கனவு மறந்து போயிருக்கும். இரண்டாம் வகைக் கனவு தூக்கத்தின் பிற்பகுதியில் தோன்றும். இவற்றை Rapid Eye Movement dreaming என்பர். இக் கனவுகள் ஒரு மணி நேரத்துக்குக் கூட நீடிக்கலாம். அறுபது முதல் தொண்ணூறு நிமிடங்களுக்கு ஒருமுறை கனவுகள் மாறி மாறி வரலாம்.

ஓர் இரவில் ஒருவர் அரை டஜன் கனவுகள் வரை காண முடியும். ஆனால் எழுந்திருக்கும் போது எவ்வளவு நினைவிருக்கும் என்று சொல்ல முடியாது.

பச்சிளம் கைக் குழந்தைகள் கூட கனவு காண்பதாக விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

ஒரு மனிதனின் சராசரி ஆயுள் எழுபத்தைந்து ஆண்டுகள் எனில் அதில் சுமார் 25 ஆண்டுகளை (நாளொன்றுக்கு எட்டு மணி நேரம்) அவன் தூக்கத்தில் கழிக்கிறான். இந்த இருபத்தைந்து ஆண்டுக் காலத்தில் அவன் கனவு காணும் நேரத்தையெல்லாம் ஒட்டு மொத்தமாகக் கணக்கிட்டால் ஏழு ஆண்டுகள் கனவுலகில் கழிவதாகத் தெரிகிறது!

!! 'வலசை போதல்' என்ற தமிழ்த் தொடர் பறவைகள் ஆண்டுதோறும் மேற்கொள்ளும் 'யாத்திரை'யைக் (migration) குறிக்கிறது.

மிகச் சிறிய மூளையை உடைய நவினமான பறவையினால் உலகின் ஒரு பக்கத்திலிருந்து மற்றொரு பக்கம் வரை எப்படி ஆண்டுதோறும் பறக்க முடிகிறது? இவ்வளவு நீண்ட, அபாயகரமான பயணத்தை அவை ஏன் மேற்கொள்கின்றன? அவற்றுக்குப் போக வர எப்படி வழி தெரிகிறது...? இக் கேள்விகளுக்குத் திருப்திகரமான விடை இன்னும் தெரியவில்லை.

சூரியனின் நிலையும் நிழல்களும் பறவைகளுக்கு வழிகாட்ட உதவுகின்றன எனக் கொள்ள இயலாது. ஏனெனில் வலசை போகும் பறவைகள் இரவில்தான் அதிகமாகப் பறக்கின்றன. எனவே, பறவைகள் வானத்து நட்சத்திரங்களை வரைபடமாகக் கொண்டு வழி கண்டுபிடித்துச் செல்கின்றனவோ என எண்ணத் தோன்றுகிறது.

சூரியனின் நிலையையும் நட்சத்திரங்களின் நிலையையும் கொண்டு பறவைகள் திக்கு திசைகளை அறிவது உண்மையெனில் அவற்றின் சிறிய மூளையில் ஒரு சூப்பர் கம்ப்யூட்டர் அளவுக்குத் தகவல்கள் பின்னிப் பிணைந்து கிடக்க வேண்டும்.

ஆங்கிலத்தில் 'bird brain' என்று சாமர்த்தியக் குறைவான ஆசாமிகளை அழைப்பது எவ்வளவு அறிவீனம்!

தொகுப்பு : உதய் லால்



# காஞ்சி மாமுனிவர்-99

**1894ல் பிறந்த மகாபெரியவாளுக்கு
இவ்வாண்டு இரட்டைப் பிறந்த நாள்!
வைகாசி அனுஷம் இருமுறை வருகிறது!
மே 20 என்ற ஆங்கிலத் தேதியையும்
சேர்த்துக் கொண்டால்
மூன்று பிறந்த நாட்கள்!**

**ஜ**கத்குருவின் தரிசனத்துக்காக வரிசைக் கிரமமாக வந்தவர்களுள் ஒருவர் அந்த பெங்களூர் பக்தர். அவர் கையில் ஒரு ப்ரீஃப் கேஸ். அதில் பணத்தின் கனம். அவர் முறை வந்ததும் குருநாதர் அடி பணிந்து பெட்டியை நீட்டினார் :

''என் காணிக்கையாக ஏத்துக்கணும்...''

நீட்டிய கரங்கள் நீட்டியபடி இருக்க, காஞ்சி முனிவர் நேருக்கு நேராகக் கரத்துக்குரியவரின் முகம் பார்த்துக் கேட்டார் :

''உனக்கு மாசச் சம்பளம் எவ்வளவு...?''

சங்கடத்துடன் நெளிந்தார் பெட்டியை நீட்டியவர். இரு விரல்களால் சமிக்ஞை செய்தார்.

## தரிசன அனுபவங்கள் :

பெரியவர் கருணையோடு சிரித்தபடி ''இரண்டுன்னா...?. இருநூறா? இரண்டாயிரமா? இருபதாயிரமா...?''

மெலிதான குரல், ''இரண்டாயிரம்'' என்றது.

காஞ்சி முனிவர் புன்னகை மாறாமல் சொன்னார் :

''பெங்களூரில் உன் குலத்தவர் வாழும் பகுதிக்குப் போ.... வீடு வீடாய்ப் படியேறி, கதவைத் தட்டு... மது அருந்தாத, புலால் உண்ணாத (இவற்றை சமிக்ஞையாலேயே உணர்த்தினார் பெரியவர்) நபர்களிடம் இரண்டு ரூபாய் வசூல் பண்ணு... அப்படிச் சேர்க்கிற இரண்டு ரூபாயை இங்கே கொண்டு வந்து கொடு... சந்தோஷமா வாங்கிக்கறேன். இதைத் திரும்ப எடுத்துண்டு போ.''

பெட்டியை நீட்டிய கை பின்வாங்கியது. விதிர் விதிர்த்துப் போனார் பெங்களூர்க்காரர். மௌனமாகப் பதம் பணிந்து எழுந்து சென்றார். சூழல் கனத்தது. பெங்களூர்க்காரருக்கு மட்டுமின்றி காத்திருந்த அனைவருக்கும் உடல் வியர்த்திருந்தது. எல்லோரது மனமும் ஆத்ம பரிசோதனைக்குத் தாவியது...

**கா**ஞ்சி முனிவர் தம் அமுத மொழிகளால் சூழ்நிலையை இலேசாக்கிய சந்தர்ப்பமும் உண்டு...

யாத்திரையினூடே மின்வசதி இல்லாத இடத்தில் அன்று தங்கியிருந்தார் முனிவர். எண்ணெய்த் திரி விளக்கின் கடமைத் தூண்டமுற்பட்ட சிப்பந்தி, தவறுதலாக அதை அணைத்து விட, ஏககாலத்தில் கண்டனக் குரல்கள் எழுந்தன... 'மகான் தங்கும் இடத்தில் இப்படி அமங்கலமாய் விளக்கை

அணைக்கலாமா?' என்று அனைவர் மனத்திலும் முள் தைத்ததைப் போல் நெருடல்.

அடியவர்களின் மனக் கிலேசம் உணர்ந்த பெரியவர் பேசலானார் :

''இந்த விளக்கைத் தூண்டறதைப் பற்றி ஒரு கதை நினைவுக்கு வரது...''

''ஒரு நாட்டின் அரசன் காலமானான். சந்ததிகள் அற்ற அவனுக்கு அடுத்தபடியாக யாரை சிம்மாசனத்தில் ஏற்றுவது...? மந்திரி, பிரதானிகள் ஒரு மாலைப் பொழுதில் கலந்து ஆலோசித்தனர். ஆலோசனை மண்டபத்தையடுத்த திறந்தவெளியில் கோவணாண்டியாய் ஓர் ஆட்டிடையன்; அவை நிகழ்ச்சியை மரியாதை மேலிட ஒதுங்கி நின்று கவனித்து வந்தான்.

''மந்திராலோசனையினிடையே எண்ணெய்த் தீபம் மங்க ஆரம்பித்தது. அனைவர் கவனமும் ஆலோசனையிலேயே இருந்ததால் இதைக் கவனிக்கவில்லை. அது வரை பணிவுடன் எட்ட நின்ற கோவணாண்டி விளக்கருகே வந்தான். தன் கோவணத்திலிருந்து ஒரு துண்டுத் துணியைக் கிழித்துத் திரியாக்கி, எண்ணெயில் முக்கியெடுத்தான். அந்தத் திரியைப் பற்ற வைத்துக் கொண்ட பின்னர் விளக்கின் சுடரை நிமிண்டி, திரியைத் தூண்டினான். அசந்தர்ப்பமாக அது அணைந்து விட்டபோதிலும் கோவணத் திரியின் சுடர், ஒளி தந்து கொண்டிருந்தது. அதனால் குத்து விளக்குத் திரியை மீண்டும் ஏற்றினான்.

''இதைக் கவனித்த மந்திரிப் பிரதானிகள் அவன் சமயோசிதத்தை வியந்தனர். ஆட்டிடையனுக்கு மேலும் பல திறமைகள் இருப்பது கண்டு அவனுக்கு ஒரு பதவி தந்து பயன்படுத்திக் கொண்டனர்.''



கதை கூறிவரும்போதே பரமாச்சாரி யாரைச் சூழ இருந்தவரிடையே இறுக்கம் நீங்கி சகஜ நிலை திரும்பியது.

மேற்படி இரண்டு சம்பவங்களையும் விவரித்தார் காஞ்சி முனிவரின் அருகிருந்து அவற்றை அனுபவிக்கும் பேறினைப் பெற்ற அத்யந்த பக்தர் ஒருவர்.

**"கா**ஞ்சி மாமுனிவரின் தரிசன அனுபவங்கள்" என்ற தமது நூலில் டாக்டர் டி. வி. சுவாமிநாதன் தமது அனுபவங் களைக் கூறியிருக்கிறார். வானதி பதிப்பகம் வெளியிட்டுள்ள அந்நூலிலிருந்து இரு சம்ப வங்கள் :

"திருமஞ்சனம் என்றால் என்ன தெரி யுமா?" என்று அருளாளர் வினவினார். "பெரியவாள் சொல்லித் தெரிந்து கொள் கிறேன்" என்று பணிவுடன் கூறினேன்.

"அஞ்சனம்னா எண்ணெய் தடவறது. மெய் அஞ்சனம்னா உடம்புக்கு எண்ணெய் தடவறது. திருமெய் அஞ்சனம்னா பகவான் திவ்ய மேனிக்கு எண்ணெய் தடவறது. திருமெய் அஞ்சனம்தான் மருவி திருமஞ்ச னம் ஆயிடுத்து" என விளக்கினார். இரு செவிகள் வழியாக இதயத்தில் இன்பத் தேன் பாய்ந்தது.

**மா**லை மயங்கிய நேரத்தில் - ஒரு மூதாட்டி தரிசனத்துக்கு வந்தார். இரு உள்ளங் கைகளையும் புருவ வளைவிற்கு மேல் குவித்து வைத்துக் கூர்ந்து நோக்கியும் அருகில் சுடர்ந்த குத்துவிளக்கின் தணிந்த ஒளியில் அமர்ந்திருந்த மாமுனிவரின் திரு மேனி அந்த அம்மையாருக்கு நன்கு புல னாகவில்லை. "தெரியல்லையே பிரபோ" என்று வருத்தத்தோடு சொன்னார்.

உடனே தயாளன் நிறைய ஒளி சிந்தும் ஒரு பெரிய டார்ச் விளக்கை வெளிச்சம் தன் மேல் விரவும் வண்ணம் திருப்பி "இப்பத் தெரியறதா?" என்று கனிவோடு விசாரித் தார்.

"நன்னாத் தெரியறது மஹானுபாவா. என் ஜன்மம் கடைத் தேறிடுத்து. என்னாலே காஞ்சிபுரம் வந்து தரிசிக்க முடியுமா? காசும் இல்லே. உடம்புலே பலமும் இல்லே. என்னைப் போலவாளைக் கடைத் தேத்த இவ்வளவு தூரம் நடந்து வந்தேளே குருநாதா..." என்று கண்ணீர் மல்க, நா தழு தழுக்க வணங்கினார் அந்த மூதாட்டி. இரண்டு மூன்று நிமிஷம் அவர் திருப்தி யுறும் வரை ஒளிவட்டத்தில் காட்சி அருளி னார்.

தொகுப்பு : 'யெஸ்பால்'

பெண்களைச்சரியா நடத்தணும்...
மேடையிலே சம உரிமை
கொடுக்கணும்...
போஸ்டரிலே பேரைப்
பெரிசாப் போடணும்...
என்ன புரிஞ்சுதா?

ஜெயலலிதா

எம்.ஜி.ஆரை நினைவு
படுத்துறதுக்காகக்
கட்சியை விட்டு
வெளியேற்றப்
பட்டவர்கள்

வட்ட, மாவட்டச்
செயலாளர்கள்

WINE SHOP
'BAR' ATTACHED

'நீங்க நல்லா
இருக்கணும்' னு
மதுவிலக்குப்
பிரச்சாரப்படம்
அம்மா எடுத்தி
ருக்காங்க...
வீடியோவில
போட்டிருக்
கேன்...
ஆறுதலா
பார்த்துக்
கிட்டே
குடிங்க!

ஆஹா, கிரீடம் எத்தனை
ஜோரா இருக்கு!

ஆமா...
சத்தியமாத்தான்
இருக்கு!
பிரதமரே
கொடுத்தாக்கூட
இத்தனை
ஜோரா
இருக்காது!

ரங்க
ராஜன்
குமார
மங்கலம்

நானும்
சொல்றேன்...
சூப்பரா இருக்கு!

சிதம்பரம்

கிரீடமாம்
கிரீடம்...
அவங்க
கொடுக்க-
நாங்களாம்...
இவரு
வாங்கிக்-
கறாராம்...
வரம்!



# கல்கி



1992
மே 24
மலர் : 50
இதழ் : 43
ஆங்கீரச
வைகாசி 11

## சாவி விவகாரம்

"முதல் கோணல் முற்றும் கோணல்" என்பதற்கு ஏற்ப அமைந்து விட்டது சாவி விவகாரம். பொதுவாகவே விளம்பரங்கள், பத்திரிகைகள், சினிமா முதலியவற்றில் பெண்கள் இழிவான முறையில் சித்திரிக்கப்படுகிறார்கள் என்ற ஆதங்கம் இங்கு பகுத்தறிவுள்ள படித்த பெண்களிடம் உண்டு. ஜனநாயக மாதர் சங்கம் போன்ற அமைப்புகள், ஆபாச சுவரொட்டிகளுக்கு ஆட்சேபித்து ஊர்வலம் போய் மக்களிடையே இவற்றுக்கு எதிரான அபிப்ராயத்தை வளர்க்க முற்பட்டதுண்டு. இதுபோன்ற சுயகௌரவம் மிக்க பெண்குலத்தினர், ஆபாசத்திற்குப் பேர் போன பத்திரிகைகள் பெண்களை இழிவுபடுத்தும் போது அடையும் துன்பத்தைக் காட்டிலும் சாவி போன்ற மதிப்புக்குரியவர்கள் நடத்தும் பத்திரிகைகளில் ஆபாசமான முறையில் பெண்கள் சித்திரிக்கப்பட்டால் மிக அதிகமான மனத் துயரை அடைகிறார்கள். போதாக்குறைக்கு ஆபாச சித்திரத்துடன் பெண்ணை அறிவற்றவளாகவும் உணர்த்தும் ஜோக்கும் சாவி பத்திரிகையில் - அதுவும் மேலட்டையில் - இடம் பெற்ற போது இம் மாதர்கள் கொதிப்படைந்ததில் வியப் பில்லை. ஊர்வலம் வந்து சாவி காரியாலயம் எதிரில் கோஷிப்பதிலும் தவறில்லை. சாவியும் அவர்கள் கருத்தை மதித்து, அடுத்த இதழில் வருத்தம் தெரிவித்துக் குறிப்பு வெளியிடுவதாகக் கூறி விட்டார்.

இத்துடன் முடிந்து போக வேண்டிய கதையை ஜனநாயக மாதர் சங்கத்தினர் குழப்பி விட்டார்கள், போலீஸில் புகார் கொடுத்ததன் மூலம். போலீஸார் சாவியைக் கைது செய்து ஸ்டேஷனுக்கு அழைத்து வர, 'போலீஸார் இத்தனை தீவிர நடவடிக்கை எடுப்பார்கள் என்று நான் எதிர்பார்க்க வில்லை; சாவி பிரதிகளைப் பறிமுதல் செய்யுமாறு மட்டுமே கேட்டுக் கொண்டேன்' என்று மைதிலி சிவராமன் கூறுவது அவரைப் புத்திசாலியாக உணர்த்தவில்லை.

தமது செயலின் பின்விளைவு என்னவாக இருக்கும் என்பதைப் பொறுப்புள்ள ஒரு மாதர் சங்கத்தின் பொறுப்புள்ள தலைவி உணர்ந்திருக்க வேண்டாமா? இதுதான் இரண்டாவது கோளாறு - கோணல்!

போலீஸார் நிதானம் காட்டி சாவி இதழ்களைப் பறிமுதல் செய்ததோடு நின்றிருக்கலாம். ஒரு மூத்த பத்திரிகையாளரை நாசூக்காக எச்சரித்து விட்டிருக்கலாம். பத்திரிகை உலக ஜாம்பவான் என்று கருதப்படுகிற ஒருவரைக் கைது செய்து பின்னர் ஜாமீனில் விடுவிக்கிற அளவுக்குப் போயிருக்க வேண்டாம். ஆனால் அவர்களுக்குத் தலைமையைத் திருப்திப் படுத்தி நல்ல பெயர் வாங்கும் சந்தர்ப்பத்தை இழக்க விருப்பமில்லை! சாவி கலைஞரின் நண்பராயிற்றே! அதனால் பாய்ந்து விட்டார்கள்! முதல்வருக்குத் தெரிந்தோ தெரியாமலோ மூன்றாவது கோளாறு நடந்து விட்டது.

நான்காவது கோணல், ஜாமீனில் வெளியே வந்த பிறகு சாவி தமது அட்டைப் படத்தை நியாயப்படுத்த முயன்று, "கோயிலில் ஆபாச சிற்பம் இல்லையா?" என்று வாதாடுவதுதான். ஆயிரம் ஆண்டுக்கு முற்பட்ட கோயில்களில் அத்தகைய சிற்பங்களை ஏன் வைத்தார்கள் என்பது நமக்குத் தெரியாது. நம் மூதாதையர் செய்தது சரியா தப்பா என்பதா இப்போது நம் வாதம்? ஆயிரம் ஆண்டுகளில் நாம் எவ்வளவோ நாகரிக முன்னேற்றமடைந்து பண்பாட்டில் வளர்ந்திருக்கிறோமே, அதை மறந்து விடுவதா? ஆயிரம் ஆண்டு நாகரிகத்தைப் பின்னுக்குத் தள்ளி விடுவது என்றால் அதே வாதப்படி நாம் அதற்கு முற்பட்ட நாகரிகங்களையும் ஒதுக்கித் தள்ளி விட்டு, கற்காலத்துக்கே போய் விடலாமே! ஆடையின்றி அலையலாமே! "காளிதாஸன் எழுதலையா? கம்பன் எழுதலையா?" என்று கேட்கும் சில ஆபாச எழுத்தாளர்களின் அபத்த வாதத்துக்கும் இதற்கும் வித்தியாசம் இல்லை.

எல்லாவற்றுக்கும் சிகரமான கோணல் இதிலும் அரசியல் ஆதாயம் தேடப் பார்க்கும் கருணாநிதி, "சாவி என் அத்யந்த நண்பர். அதனால் பழிவாங்கப்பட்டிருக்கிறார்" என்று கண்ணீர் சிந்தாத குறையாகப் புலம்புவது ஆகும்.

அரசியலை ஆபாசமாக்கிய தலைவர்களும், தலைவியரும் ஆபாசத்தையும் அரசியலாக்குகிறார்கள்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

இன்று நிதி அமைச்சர் மன்மோகன் சிங் பொருளாதாரத் துறையில் பல பிரமிக்கத்தக்க மாற்றங்கள் புகுத்தியுள்ளார் என்பது எவ்வளவு உண்மையோ, அவ்வளவு உண்மை, அந்த மாற்றங்கள் ராஜீவ் பிரதமராக இருந்த காலத்திலேயே தொடங்கப்பட்ட முயற்சிகள்தான் என்பதும்.

''பொதுத் துறை நிறுவனங்கள் ''சோஷலிசம்'' என்ற பெயரில் நஷ்டத்தில் இயங்கிக் கொண்டிருப்பதை அனுமதிக்க முடியாது'' என்று பதவிக்கு வந்தவுடனேயே சொன்னார் ராஜீவ். அப்போது ராஜீவ் என்ன சொன்னாலும், எதிர்த்துக் கேட்க ஆள் இல்லை என்பது ஒருபுறம் இருக்க 'இந்த இளைஞர் இந்தியாவை, நல்ல வழிக்குக் கொண்டு செல்வார்' என்ற நம்பிக்கை எல்லோரிடமும் இருந்தது என்பதும் உண்மை.

## ''21ம் நூற்றாண்டுக்குத் தயாராவோம்!''

பஞ்சாப் ஒப்பந்தம், அஸ்ஸாம் ஒப்பந்தம், மிஜோ ஒப்பந்தம், என்று பல ஒப்பந்தங்களைப் போட்டு, அரசியல் அமைதியை ஏற்படுத்த அவர் முயன்றது பெரும் பாராட்டைப் பெற்றது. அரசியல் அமைதி நிலவினால்தான் பொருளாதாரமும் வேகமாக முன்னேறும்! ''இருபத்தோராம் நூற்றாண்டுக்குத் தயாராவோம்'' என்று அவர் அறைகூவல் விடுத்ததும், தொழில் துறையை நவீனப்படுத்துவதில் பெரும் ஆர்வமுள்ளவராகக் காட்சியளித்தார்.

கம்ப்யூட்டர் இயந்திரங்களை இந்தியவின் அன்றாட வாழ்வில் தொடர்புடையதாக ஆக்கியது ராஜீவின் சாதனைதான். கம்ப்யூட்டர் தொடர்பான அறிவாற்றல் இன்று அந்நியச் செலாவணியையும் நமக்கு ஏராளமாகச் சம்பாதித்துத் தந்து கொண்டிருக்கிறது.

''தாராளமயமாக்குதல் (liberalisation) என்ற வார்த்தையே, ராஜீவ் காந்தியின் காலத்தில்தான் இந்தியாவில் பேசப்பட ஆரம்பித்தது'' என்று சொல்கிறார் 'வளரும் நாடுகளில் பொருளாதாரம்' என்ற தலைப்பில் ஆராய்ச்சி செய்து வரும் பேராசிரியர் சீனிவாச மூர்த்தி. அதற்கு முன்பெல்லாம் கட்டுப்பாடுகள் (controls) என்ற சொல்தான் தொழில்துறையில் மேலாதிக்கம் செலுத்தி வந்தது.

''நமது நாட்டுப் பொருளாதாரத்துக்கு இடைஞ்சல் இல்லாத வகையில் வெளிநாட்டுத் தொழிலகங்கள், இந்தியாவில் தொழில் துவங்க அனுமதிப்போம்'' என்ற

☛ பத்திரிக்கை' சிகருடன் ஆலோசனை



☛ 'மிஸ்டர் க்ளீன்'



# ராஜீவ் இல்லா இந்தியா



☛ "மீண்டும் ஒரு வாய்ப்புக் கொடுங்கள்"



☛ ராஜபார்வை

ராஜீவ், அதற்கான ஆரம்ப முயற்சிகளை அன்றே மேற்கொண்டார். தவிர, பட்ஜெட்டில் கம்பெனிகளுக்கான நேரடி வரி குறைக்கப்பட்டது. 'வருடத்துக்கு வருடம் கொள்கை மாற்றித் தொல்லை கொடுக்க மாட்டோம்' என்பதைத் தொழிலதிபர்களுக்கு உணர்த்த, 'நிலையான நிதிக் கொள்கை' என்று பேசப்பட்டது. புதிதாகத் தொழிலகங்களைத் தொடங்கவும் விஸ்தரிக்கவும் சட்ட திட்டங்கள் எளிமையாக்கப்பட்டன. ஒரே தொடர்புடைய தொழிலில் புதிய உற்பத்திகளைத் துவங்க அனுமதி தேவையில்லை என்று முடிவு செய்யப்பட்டது. உதாரணமாக மோட்டார் சைக்கிள் உற்பத்தி செய்பவர் ஸ்கூட்டர் உற்பத்தியை அனுமதியின்றித் துவங்கலாம். ஏகபோக நிறுவனங்களின் சொத்து வரம்பு உயர்த்தப்பட்டது. இறக்குமதி கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டன. இதனாலெல்லாம் பங்கு மார்க்கெட் சுறுசுறுப்படைந்தது.

## பக்கபலம் சரிந்தது!

ராஜீவின் தீர்க்கதரிசன திட்டங்களுக்குப் பக்க பலமாகச் சரியான நபர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். நிதியமைச்சர் வி. பி. சிங் ஒரு சிறந்த பட்ஜெட்டை வழங்கினார். சாம் பிட்ரோடா தொலைத் தொடர்பு தொழில்நுட்பத் துறையில் சேவை மனப்பான்மையுடன் உதவினார். அது இன்று அற்புதங்களைச் சாதித்துள்ளது.

இப்போது, நரசிம்ம ராவ் அரசு அறிவித்துள்ள புதிய பொருளாதாரக் கொள்கை உண்மையில் அவ்வளவு புதியதல்ல என்பது ராஜீவின் ஆரம்பக் கால அறிக்கைகளையும் செயல்பாடுகளையும் கூர்ந்து பார்த்தால் தெரியும். இந்திய பொருளாதாரச் சந்தையை ஆரோக்கியமான போட்டி நிறைந்ததாக மாற்றும் ராஜீவின் முயற்சி தான் இன்றும் தொடர்கிறது.

ஆனால் ராஜீவ் காலத்தில் தவறுகளும் நிகழ்ந்தன. அரசுச் செலவினங்கள் குறைக்கப்படாததால் பட்ஜெட் பற்றாக்குறை அதிகரித்துக் கொண்டே வந்தது. அத்துடன் கடுமையான வறட்சியும் சேர்ந்து கொண்டது. போதாக்குறைக்கு போஃபர்ஸ் பேரம் பற்றிய செய்திகள் வெடித்து, ராஜீவ் என்ற நாட்டு நிர்வாகியை ராஜீவ் என்ற அரசியல்வாதியாக மாற்றின. வி. பி. சிங், அருண் சிங், அருண்நேரு பிரிந்து போயினர்.

தம் இமேஜைக் காப்பாற்றிக் கொள்ள கவர்ச்சிகரமாக ஏதாவது செய்ய வேண்டும் என்று ஜவஹர் வேலை வாய்ப்புத் திட்டம், பஞ்சாயத் ராஜ் போன்றவற்றை அறிமுகப்படுத்தினார் ராஜீவ். அரசின் செலவுகள் அதிகமாயின. பட்ஜெட் பற்றாக்குறை அதிகரித்தது. அன்னியச் செலாவணி கையிருப்பு குறைந்தது.

1991 தேர்தல் சமயத்தில் தமது குறைகளையும் தவறுகளையும் உணர்ந்தவராகத் தோன்றிய ராஜீவ், 'மக்கள் மற்றொரு சந்தர்ப்பம் அளித்தால் தன்னால் தவறுகளைச் சரிசெய்து வெற்றிக் கொடி நாட்ட முடியும்' என்று பேசலானார். ஆனால் மக்கள் அவருக்கு ஒரு வாய்ப்புத் தருமுன்னர் நடக்கக் கூடாதது நடந்து விட்டதே!

## போஃபர்ஸ் பூதம்

நம்பிக்கையூட்டும் பொருளாதார சீர்திருத்தங்களும் தொலைநோக்கும் தலைதூக்கிய ஒரு தருணத்தில் ராஜீவை போபர்ஸ் விவகாரம் வீழ்த்தியது. இன்று கிட்டத்தட்ட அதே போன்ற சூழலில், புதிய பொருளாதாரக் கொள்கை பற்றி நாடெங்கும் முழங்கிக் கொண்டிருக்க; சிதம்பரமும் மன்





☛ நினைவாலயம் எழும்...

☛ தீரர்

மோகன் சிங்கும் அறிவித்த ஆரோக்கிய மான சீர்திருத்தங்களைப் பின்னுக்குத் தள்ளி விட்டு துருத்திக் கொண்டு நிற்பது போஃபர்ஸ் விவகாரம்தான்! அப்போது எதிர்க்கட்சிகள் பிலுபிலுவென்று ராஜீ வைப் பிடித்துக் கொண்டது போல் இப் போது நரசிம்மராவைப் பிடித்துக் கொண் டுள்ளன.

## புதிய திருப்பங்கள்

இந்த வருடம் பிப்ரவரி மாதம் ஸ்வீடன் பத்திரிகையான டாகென் நைஹெடர், 'போஃபர்ஸ் நிறுவனம் பீரங்கி பேரத்தில், ராஜீவ் காந்திக்கு ஏ. இ. சர்வீஸஸ் நிறுவனம் மூலமாகக் கமிஷன் கொடுத்தது' என்ற செய்தியை வெளியிட்டது. இந்தச் செய் தியை அந்த பத்திரிகைக்குச் சொன்னவர் போபர்ஸ் நிறுவன அதிகாரி ஒருவர். இந்தச் செய்தி இந்தியாவில் வெளியானதும், மறு படியும் பற்றிக் கொண்டது போஃபர்ஸ் தீ!

நரசிம்ம ராவ் அரசு போஃபர்ஸ் விசார ணையைத் தீவிரமாக நடத்தி உண்மைகளை வெளிக்கொணர வேண்டும் என்று எதிர்க் கட்சிகள் வலியுறுத்தின. ஆனால் போ ஃபர்ஸ் விவகாரத்தைக் கிளறுவது ராஜீவுக் கும் காங்கிரஸ் கட்சிக்கும் களங்கம் கற்பிப் பதாக முடியுமோ என்ற அச்சம் காங்கிரஸ் காரர்கள் பலரிடமே இருக்கும் போது ராவ் என்ன செய்வார்? வழக்கம் போல ஆறப் போட்டார்.

ஆனால்... சில நாட்களிலேயே மீண் டும் பூகம் புறப்பட்டது! ரகசிய கணக்குகள் பற்றிய விசாரணையைத் தீவிரமாக நடத்த வேண்டாம் என்றும் முதல் தகவல் அறிக் கையை எதிர்த்து வின்சட்டா (கமிஷன் பெற்றதாகக் குற்றம் சாட்டப்பட்டுள்ள ஏஜெண்ட்) இந்தியாவில் தாக்கல் செய் துள்ள வழக்கின் முடிவு தெரியும் வரை ஒன்றும் செய்ய வேண்டாம் என்றும் தெரி விக்கும் கடிதம், வெளியுறவு மந்திரி சோலங்கியால், ஸ்விஸ் வெளியுறவுத் துறை அமைச்சர் ரெனி பெல்பரிடம் கொடுக்கப்பட்டதாகத் தகவல் வெளியானது.

பார்லிமெண்ட் கலகலத்தது. சோலங்கி பதவியை ராஜினாமா செய்தார். 'அந்தக் கடிதத்தில் என்ன எழுதி இருந்தது என்று எனக்குத் தெரியாது; அதைத் தந்த வழக் கறிஞர் பெயரை வெளியிட முடியாது' என்று சோலங்கி நம் காதில் பூ சுற்றினார்.

இந்தச் சூழலில் நரசிம்மராவின் நிலைதான் பரிதாபமானது. போபர்ஸ் விசா ரணையைத் தீவிரப்படுத்துவாரேயானால், ''ராஜீவ் புகழை அழிக்கச் சதி செய்கிறார், சோனியாவை அரசியலுக்கு வராமல் தடுக்க முயற்சி'' என்ற குற்றச்சாட்டுக்கள் காங்கிர ஸாரின் ஒரு பிரிவிலிருந்து வரும்; மெத்தன மாகக் கிடப்பில் போட்டாரென்றால், எதிர்க்கட்சிகள் சும்மா விடாது. எவ்வா றாயினும் போஃபர்ஸ் பூதம் ஒழிந்தால்தான் காங்கிரஸுக்கு நிம்மதி. போஃபர்ஸ் பூதம் ஒழிய ஒரே வழி உண்மைகளை ஒளிக்காமல் அம்பலத்துக்குக் கொண்டு வருவதுதான்.

## ஹரிபாபுவின் காமிரா

''ஹரிபாபுவின் காமிரா மட்டும் குண்டு வெடிப்பில் நாசமாகி இருந்தால், 'கண் ணைக் கட்டிக் காட்டில் விட்டது போல நாங்கள் அலைந்து கொண்டிருப்போம்'' என்றார் ஒரு போலீஸ் அதிகாரி. ''கொலை சதியில் ஹரிபாபுவுக்குப் பங்கு உண்டா என் பது வழக்கு நடக்கும் போது விவரமாகத் தெரியவரும் என்பது ஒரு பக்கம் இருக்க, அவன் எடுத்த போட்டோக்கள்தாம் புல னாய்வுக்கு அடிப்படையாக அமைந்தன

# இப்பொழுது உங்கள் குழந்தைக்கு சாதாரண அரிசி தானியத்தைவிட மேலான உணவை கொடுங்கள்.

அறிமுகப்படுத்துகிறோம்

## ஃபாரெக்ஸ்-ரைஸ்
### பால் அடங்கியது

சுவையும் ஊட்டச்சத்தும் கொண்டது.

சாதாரண அரிசி தானியத்தைக் கொடுத்து குழந்தையின் திட உணவைத் தொடங்குவதைவிட ஃபாரெக்ஸ் – ரைஸ் அளியுங்கள்.

ஃபாரெக்ஸ் – ரைஸ் பாலின் ஊட்டமும், வைட்டமின்களும், தாதுப்பொருட்களும் கொண்டது. எளிதில் ஜீரணிக்கக் கூடியது.

தேவையான ஊட்டச்சத்தை சுவையான வழியில் உங்கள் குழந்தைக்கு கொடுக்க ஒரே வழி. ஃபாரெக்ஸ் – ரைஸ் நீருடன் கலந்து அளித்தால் போதுமானது.

நான்கு மாதங்கள் முதல்

**ஃபாரெக்ஸ்-ரைஸ்**
**சுவையுடன் வளரும் வழி.**






முக்கிய அறிவிப்பு : தாய்ப்பால் உங்கள் குழந்தைக்குச் சிறந்தது. நான்கு மாதங்கள் முதல், உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால் மட்டுமின்றி, தானிய உணவையும் கொடுங்கள்.

Gx.646.92.Tm







என்பதில் சந்தேகம் இல்லை'' என்றார் அவர்.

**கொ**லை நடந்த இரண்டே நாட்களில் நியமிக்கப்பட்ட சிறப்புப் புலனாய்வுக் குழுவின் தலைவர் கார்த்திகேயனுக்குத் தம் பணியாளர்களை விரட்டி, வேலை வாங்க வேண்டிய அவசியமே இல்லாமல் இருந்தது. எல்லோருக்கும் கொலைக் கும்பலைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற வெறி இருந்தது.

## வாழப்பாடியார் ஆர்ப்பாட்டம்

ராஜீவ் காந்தி காலமானவுடனேயே, மிக அசிங்கமான முறையில் அதைத் தேர்தல் வெற்றிக்கு வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொண்டது தமிழக இ. காங்கிரஸ். ராஜீவின் ரத்தம் சிந்திய உடலைப் போஸ்டர்களாக்கியதுடன், ராஜீவின் மரணத்துக்குக் காரணமே 'தி.மு.க.வின் சதித்திட்டம்தான்' என்றும் புரளி பண்ணி, வோட்டு அறுவடை செய்தது. இந்த கீழ்த்தரமான தந்திரத்தில் முன்நின்றவர் வாழப்பாடி ராமமூர்த்தி.

ஆனால் 'பின்னால்' நடந்தது என்ன? வர்மா கமிஷன் முன் சமர்ப்பிக்கப்பட்ட சாட்சியங்களில் தி.மு.க. மீது பழிசுமத்துவது போல பகிரங்க சாட்சியம் ஏதும் இல்லை. ஆனால் பாதுகாப்பு ஏற்பாடுகளைச் சரியாகச் செய்யாமல் இ. காங்கிரஸ் தவறிழைத்து விட்டதற்கு ஏகப்பட்ட சான்றுகள். இதில் மரகதம் சந்திரசேகர், அவர் மகள், வாழப்பாடி உள்பட பலர் மீது நேரடி யான குற்றச்சாட்டுக்கள்.

## சுப்புலட்சுமி ஜகதீசன் கைது

இவ்வாறு விசாரணையின் போக்கு அமைவதை உணர்ந்ததன் காரணமாகத் தானோ என்னவோ, பழைய பத்மனாபா கொலை வழக்கை மறுபடி கிளறி, தூசி தட்டி அதில் தி. மு. க. பிரமுகர்கள் பலரைத் தொடர்புபடுத்தி, தடா சட்டத்தில் கைதாக வழிவகுத்தார், வாழப்பாடியுடன் இரட்டைக் குழல் துப்பாக்கியாகச் செயல்பட விரும்பும் முதல்வர் ஜெயலலிதா. அதிகாரி நாக ராஜன், சுப்புலட்சுமி, ஜகதீசன் முதலியோர் தடாவில் கைதாயினர். இவர்களெல்லாம் எந்த அளவில் குற்றமிழைத்தவர்கள் அல்லது அப்பாவிகள் என்பது நீதி விசாரணையின் போதுதான் வெளிப்படும் என்பது ஒருபுறமிருக்க,

ராஜீவ் கொலை வழக்கில் குற்றம் சாட்டப்பட்டவர்கள் பத்மநாபா கொலை தொடர்பாகக் கைது செய்யப்பட்டவர்கள் ஆகிய அனைவரும் ஒரே நீதிபதியின் முன் ஆஜர்படுத்தப்பட்டமையால், 'எல்லோரும் ராஜீவ் கொலையில் சம்பந்தப்பட்டவர்கள் தான்' என்ற தவறான தோற்றம் வேறு மக்களிடையே உருவாகியிருக்கிறது.

## வழக்கு என்று?

தடா சட்டப்படி கைது செய்யப்பட்ட ஒரு வருடத்துக்குள் கோர்ட்டில் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யப்பட வேண்டும். அதன்படி இந்த வருடம் ஜூன் 11ம் தேதிக்குள் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்ய வேண்டும். ஆனால் சி.பி.ஐ. கடைசி வினாடி வரை காத்துக் கொண்டிருக்கப் போவதில்லை எனத் தெரிகிறது. இந்த வழக்கில் குற்றம்சாட்டப்பட்டு இருக்கும் புலித் தலைவர் பிரபாகரன், பொட்டு அம்மான் ஆகியோர் கைது செய்யப்படுவதற்கான சாத்தியம் மிகக் குறைவு. இந்த நிலையில், தமிழகத்திலேயே, கடைசி கட்ட கைதாக இன்னமும் ஒருசிலர் 'உள்ளே' போடப்படலாம் என்று பேச்சு அடிபடுகிறது.

## வர்மா கமிஷன்

ஸ்ரீபெரும்புதூர் பொதுக் கூட்டத்தில் செய்த பாதுகாப்பு ஏற்பாடுகளைப் பற்றி

விசாரிக்க, சென்ற வருடம் மே மாதமே அமைக்கப்பட்டது, ஜே. எஸ். வர்மா கமிஷன். சுப்ரீம் கோர்ட் நீதிபதி வர்மா, மொத்தம் 74 நாட்கள் விசாரணை நடத்தினார். 104 பேர் விசாரிக்கப்பட்டனர். ஏழு நாட்கள் ரகசிய விசாரணை நடந்தது. 37 நாட்கள் பகிரங்கமாகவும், 30 நாட்கள் பாதி பகிரங்கமாகவும் பாதி ரகசியமாகவும் விசாரணை நடந்தது.

பகிரங்க விசாரணையின் போது நீதிபதி வர்மா, ராஜீவின் ஸ்ரீபெரும்புதூர் விஜயத்துக்குத் தகுந்த பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்யத் தவறியதற்காகவும் போலீஸுடன் சரிவர ஒத்துழைக்காததற்காகவும் அனைத்திந்திய காங்கிரஸ் கமிட்டி குழுவினரைக் கடுமையாகச் சாடியுள்ளார். வாழப்பாடி உள்பட பல மூத்த காங்கிரஸ் உறுப்பினர்கள் வர்மா கமிஷனால் அஜாக்கிரதைக்காகக் கண்டிக்கப்பட்டுள்ளனர். இ. காங்கிரஸோ இப்போது 'தி. மு. க. சதித் திட்டம்' என்ற பல்லவியை விட்டு விட்டு, 'ராஜீவ் மரணத்துக்குக் காரணம் வி. பி. சிங்தான். அவர் தான் பாதுகாப்புப் பட்டாளத்தைக் குறைத்து விட்டார்' என்று புதிய பாட்டு இட்டுக் கட்டி நிரவல் பண்ணியது வர்மா கமிஷன் முன்பு!

## ஜெயின் கமிஷன்

இன்னும் இரண்டு மாதங்களுக்குள் தமது பூர்த்தியான அறிக்கையைத் தாக்கல் செய்வார் வர்மா. பாதுகாப்பு ஏற்பாடுகள் பற்றிய இந்த விசாரணை மட்டும் போதாதென்று கொலைக்குப் பின்னால் உள்ள சதியைப் பற்றி விசாரிக்க நீதிபதி மிலப் சந்த் ஜெயின் தலைமையில் ஒரு கமிஷன் அமைக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கமிஷன் ஆமை வேகத்தில் தன் பணியைத் தொடங்கியிருக்கிறது. கார்த்திகேயன் குழு தனது விசாரணைக் குறிப்புக்கள் முழுவதையும் இந்த நீதிபதியிடம் அளிக்கும். இது தவிர, கமிஷன் சார்பில் போலீஸ் அதிகாரிகள் நியமிக்கப்பட்டு, அவசியமானால் புலனாய்வு தொடரப்படும்.

## ஸ்ரீபெரும்புதூர்

சென்னை - பெங்களூர் நெடுஞ்சாலையில் பயணம் செய்து கொண்டிருப்பவர்கள், ஸ்ரீபெரும்புதூரை ஒட்டிய அந்த இடத்தைப் பார்த்ததும் யோசனையில் ஆழ்ந்து விடுகிறார்கள். பலர் கண்கலங்குகிறார்கள். "நாட்டிற்குச் சேவை செய்து சிறப்புற வாழ வேண்டியவர் இங்கே வந்து குரூரமாகக் கொலை செய்யப்பட்டாரே!" என்று மனம் நொந்து கொள்கிறார்கள்.

தற்காலிகமாக, ராஜீவ் இறந்த இடத்தைச் சுற்றி, வட்டக் கொட்டகை, மெலிதான மேற்கூரையோடு கட்டப்பட்டிருக்கிறது. தினசரி சராசரியில் 300 பேர் வந்து அஞ்சலி செலுத்துகிறார்கள். கற்பூரம், ஊதுபத்தி அடையாளங்கள் தெரிகின்றன. முக்கியமான வி. ஐ. பி.க்கள் வந்தால் மட்டும் கேட்டைத் திறந்து கொட்டகைக்குள் விடுகிறார்கள்.

ஸ்ரீபெரும்புதூரில் பை-பாஸ் சாலை, பெங்களூர் செல்லும் நெடுஞ்சாலையில் இணையும் இடம் அருகில் பதினான்கு ஏக்கர் நிலத்தில் அமைய இருக்கிறது ராஜீவ் நினைவாலயம்.

## நினைவாலயம்

நினைவாலயத்தை யார் கட்டுவது என்று முதலில் கருத்து வேற்றுமை இருந்தது. 'தமிழக அரசுதான் கட்ட வேண்டும்' என்று ஜெ. பிடிவாதம் பிடித்தார். அப்புறம் பிரதமர் 'நீங்கள் நிலம் மட்டும் கொடுங்கள்' என்று சொல்லவே ஒதுங்கினார் ஜெ. பின்னர் மத்திய பொதுப் பணித்துறை கட்டுவதா அல்லது ராஜீவ் காந்தி பவுண்டேஷன் கட்டுவதா என்று பிரச்னை. இடையில் மனிதவள மேம்பாட்டுத் துறை வேறு... கடைசியில் வென்றது மனிதவள மேம்பாட்டுத் துறைதான். அதன் அமைச்சர் அர்ஜுன்சிங் தலைமையில் கமிட்டி போடப்பட்டிருக்கிறது. கட்டிட நிபுணர் கவிதா கோஷ்லி, ராஜீவின் நண்பர் ரோமி சோப்ரா ஆகியோர் அதில் உறுப்பினர்கள். ராஜீவ் பவுண்டேஷன், காங்கிரஸ் கட்சி, மத்திய அரசு, ஆகியவை நினைவாலயத் திருப்பண உதவி அளிக்கும். பிரதமர் அடிக்கல் நாட்ட இருக்கிறார்.

## எதிர்ப்புக் குரல்

இந்த நிலையில், நினைவாலயத்தை அந்த இடத்தில் கட்டக் கூடாது என்று தனிக் குரலாக ஒலிக்கிறது ஸ்ரீபெரும்புதூர் வரத எத்திராஜ ஜீயரின் குரல் :



"ஆச்சரியமாய் இருக்கே, நேற்று என் கச்சேரி கேட்டதிலிருந்து இன்னுமா உங்க காதுலே ரீங்கார ஒலி கேட்டுண்டே இருக்கு?"

"ஆமா, சபாவிலே கொசு, எக்கச்சக்கம்!"



சென்னை அண்ணா நகரில் கரும்புச் சாறு வியாபாரம் செய்யும் ஒருவரின் வியாபாரத் தந்திரம் :

''வாங்க வாங்க அண்ணாச்சி;
திரும்பிப் பாரு அண்ணாச்சி;
இரும்புச்சத்து வேணுமா?
கரும்புச்சாறு குடிங்கண்ணே!''
இவ்வாறு அழைக்கிறார்!

– கே. என். பாலகிருஷ்ணன்



''நீங்க ஏன் உங்க மனைவி பேர்ல கதை எழுதறீங்க?''

''கதையைப் படிச்சிட்டு நாலு பேர் அவ பேரைச் சொல்லித் திட்டினாங்கன்னா, அதுல கிடைக்கிற சுகமே அலாதி போங்க!''

– சீர்காழி வி. ரேவதி

''இங்கே நடக்க இருந்த பட்டிமன்றத்தைப் போலீஸ் தடை செய்துட்டுதாமே... ஏன்...?''

''சி. எம். காலில் அதிகமாக விழுவது, அமைச்சரா, எம். எல். ஏ. வான்னு பட்டிமன்றம் நடத்த இருந்தாங்களாம்!''

– ராஜூராமயன்



''ராமானுஜர் அவதரித்துப் பெருமைப்பட்ட இந்த ஸ்தலத்தில், ராஜீவ் மரணமடைந்தது ஊருக்கு ஒரு அவப் பெயரைத் தேடித் தந்து விட்டது. அந்த இடத்தில் பொதுக் கூட்டமே போட்டிருக்கக் கூடாது. அது கோவில் நிலம். இப்போது நினைவாலயம் கட்ட இருக்கிறார்கள். அப்படிக் கட்டினால் வருடத்திற்கு ஒருமுறை பெருமாள் கோட்டகத்திற்குச் செல்ல முடியாது.

''உலகில் பல தலைவர்கள் இறந்திருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு இறந்த இடத்திலேயேதான் நினைவாலயம் கட்டியிருக்கிறார்களா?'' என்று கேட்கிறார் ஜீயர்.

''ஊரை ஒட்டிப் புறம்போக்கு நிலங்கள் இருக்கின்றன. அதில் கட்டலாம். மேலும் 12 லட்சம் மதிப்புள்ள நிலத்தை அரசு ஒன்பது லட்சத்திற்கு வாங்கி உள்ளது! இது கோயில் சொத்து அல்லவா! கோயில் நல வாரியம் வைத்து நல்ல முறையில் செயல்படும் முதல்வர் ஆட்சியில் இது போல் நடக்கலாமா?''

கோயிலுக்கும், மடத்துக்கும் பரம்பரை தர்மகர்த்தா ஜீயர்தான், என்றாலும், அந்தப் பொறுப்பைத் தக்கவைத்துக் கொள்ள சட்ட ரீதியிலான, போராட்டத்தில் இறங்கியிருக்கிறார் அவர்!

## என்ன பயன்?

''கோடிக்கணக்கில் செலவழித்து நினைவாலயம் கட்டுவதால் என்ன பயன்? அதற்குப் பதில், ராஜீவ் பெயரில் பெரிய தொழிலகம் அமைத்தால் மக்களுக்கும் வேலை வாய்ப்புக் கிடைக்கும், ராஜீவ் நினைவும் மக்களிடம் தங்கி இருக்குமே'' என்று ஸ்ரீபெரும்புதூர் சட்டமன்ற உறுப்பினர் போளூர் வரதனிடம் கேட்டோம்.

''அந்த மாதிரி யோசனைகளும் இருக்கின்றன. நினைவாலயம் கட்டுவதால் வேறு எதுவும் செய்யக் கூடாது என்று இல்லை. மத்திய பல்கலைக் கழகம் ஒன்றை ஸ்ரீபெரும்புதூரில் அமைக்கக் கோரியிருக்கிறோம். மற்றும் நினைவாலயம் உள்ள பகுதி எதிர்காலத்தில் நன்கு வளர்ச்சி பெற வாய்ப்பு உள்ளது. அந்த இடத்திற்கு ராஜீவ் பெயர் தானாகவே வந்து நிலைத்து நிற்கும்'' என்றார் வரதன்.

– ப்ரியன்

அட்டை வண்ணப்படம் :
டி. ராமமூர்த்தி
படங்கள் : ராஜன்

இந்தத்

# திருத்தலங்கள் பெருமை பெற்றதேன்?

கீழ்க்கண்ட தலங்களின் மகான்களின் சமாதிகள் அடங்கியுள்ளன. எனவே தான் அவைகள் மற்ற தலங்களை விட மிக உயர்ந்த திருத்தலங்களாக விளங்கி கோடிக்கணக்கான பக்தர்களை கவர்ந்து இருக்கின்றன.

1. சிதம்பரம் - திருமூலர்
2. அழகர் மலை - ராமதேவர்
3. திருவண்ணாமலை - இடைக்காடர்
4. எட்டுக்குடி - வான்மீகர்
5. மயிலாடுதுறை - குதம்பைச் சித்தர்
6. பழநி - போகர்
7. திருப்பதி - கொங்கணவர்
8. காசி - நந்தி
9. ராமேஸ்வரம் - பதஞ்சலி
10. திருவனந்தபுரம் - கும்பமுனி
11. வைத்தீஸ்வரன் கோயில் - தன்வந்திரி
12. திருமுதுகுன்றம் (விருத்தாசலம்) - பாம்பாட்டி சித்தர்
13. திருவாரூர் - கமலமுனி
14. திருப்பரங்குன்றம் - மச்சமுனி

மேற்கண்ட திருத்தலங்களில் பற்பலப் பெயர்களில் வீற்றிருக்கும் இறைவன் அடியார்களின் வினை தீர்த்துக் குறைகளைப் போக்கித் திருவருள் பாலித்து வருகிறார் என்பது மெய்யன்பர்கள் நன்கறிந்ததே!



✍ ''சுகி''

# 'சுகி' தந்த செல்வங்கள்

மேடை நாடகங்கள், டீவி நாடகங்களை விட, ரேடியோ நாடகங்கள் உருவாக்குவது ரொம்பக் கஷ்டம். பின்னதில் முக பாவம், நடிப்பு, காட்சி அமைப்பு முதலியவற்றுக்கு இடமில்லை. குரலிலேயே பாவம் காட்டி நடிக்க வேண்டியதுதான். இதை மனத்தில் கொண்டால், ''காப்பு கட்டிச் சத்திரம்'' போன்ற மறக்க முடியாத, ஹாஸ்ய ரசம் பொங்கித் ததும்பிய ரேடியோ தொடர் நாடகங்களை எழுதித் தயாரித்த 'சுகி'யின் பணி எவ்வளவு சிறப்பானது என்பது புரிந்து போகும்.

சுப்பிரமணியம், தமது பெயரிலிருந்து முதல் எழுத்தை எடுத்துக் கொண்டார்; தம்மை ஏகலைவனாகக் கருதி, தாம் குருவாக ஏற்ற 'கல்கி' கிருஷ்ணமூர்த்தியின் பெயரிலிருந்து முதல் எழுத்தை அதனுடன் இணைத்தார். ''சுகி''யானார்.

முதன் முதலாக நடந்த அமரர் 'கல்கி' நினைவுச் சிறுகதைப் போட்டியில் முதல் பரிசை அவரது ''துறவி'' என்ற அற்புதமான சிறுகதையே பெற்று உயர்ந்தது.

எனவேதான் பொருத்தமான விதத்தில் கல்கியின் முந்நாள் ஆசிரியர் ஒருவரும் (மீ. ப. சோமு) இந்நாள் ஆசிரியரும் சேர்ந்து சுகி பவழ விழாவில் பங்கேற்று, அவரின் நினைவுக்கு அஞ்சலி செலுத்தினார்கள்.

சுகி வாழ்க்கையை ரசிக்கத் தெரிந்தவர். வாழ்க்கையை அனுபவிப்பது என்றால் அதற்குப் பணம் காசு நிறைய வேண்டுமென்பதில்லை. 'ஒரு சூரியோதயத்தின் எழில்; ஒரு மலரின் அழகு; ஒரு கவிதையின் நயம் இவற்றை ரசிக்கப் பணம் காசு எதற்கு?' என்பார் சுகி. ஓர் ஆரஞ்சுப் பழத்தை உரித்து, 'புறத்தோல், உள்தோல் என்று எத்தனை பாதுகாப்பு!' என்று வியப்பார். சுளையின் முத்துக்கள் பூத் தொடுத்தாற்போல் அடுக்கப்பட்டுள்ள நேர்த்தியைக் கண்டு பிரமிப்பார். சாறின் சுவையில் லயிப்பார்.

சுகி ஒரு விருந்துக்குப் போனார். எல்லாம் நன்றாக இருக்க, சாதம் மட்டும் கொட்டை கொட்டையாக... சொன்னார் சுகி : ''அவியல், பொரியல், பாயஸம் எல்லாம் பிரமாதம். சாதம் மட்டும் பெரிதாக இருந்தது, உங்கள் மனம் போல!'' உண்மையும் கூற வேண்டும், மனம் புண்படாமலும் காக்க வேண்டும் என்ற எண்ணம் மிருதுவான சிரிப்பையும் தோற்றுவித்தது.

ஓவியர் உமாபதி தமது கலை வாழ்க்கையின் ஆரம்ப காலத்தில் பெற்ற ஒரு கடிதத்துடன் ஓடி வந்தார் சுகியிடம். ''இலங்கைப் பத்திரிகை ஒன்றில் எனக்கு வேலை கிடைச்சுட்டுது; முந்நூறு ரூபாய் சம்பளம்'' என்று உற்சாகத்துடன் துள்ளினார்.

சுகி அமைதியாக, ''உன் திறமை உனக்கே தெரியலை; வெகு சீக்கிரம் இங்கேயே மூவாயிரம் சம்பாதிப்பாய். இலங்கை போக அவசியம் இல்லை'' என்றார். அந்த வாக்கு அப்படியே உண்மையாகி, அவரது மனிதர்களை எடை போடும் திறனுக்கும் எதிர்காலத்தை ஊடுருவும் ஆற்றலுக்கும் சான்று பகர்ந்தது.

ஏராளமான சிறுகதைகள், ரேடியோ நாடகங்கள் எழுதிய சுகி, இந்தக் கலைச் செல்வங்கள் தவிர மதிப்புமிக்க மக்கட் செல்வங்களையும் விட்டுச் சென்றார். அவர்களில் எம். எஸ். பெருமாள் ஒருவர். டீ.வி. நிகழ்ச்சி உருவாக்கத்தில் உதவி இயக்குனர். இன்று புதுவையில் பணியாற்றி வருகிறார்.

இன்னொருவர்... (ஊகிக்க அரை நிமிட அவகாசம்!) உங்களுக்குக் கல்கி மூலம் வாரா வாரம் பக்தி மணம் மிக்க ஞானமலர்கள் அளித்து வரும் சுகிசிவம்!

– குமரன்

# நிலா மயக்கம்

சுபா

## 7

முதலில் சுதாரித்துக் கொண்டவள் நந்தினிதான்.

''ஹலோ... எங்கே இந்தப் பக்கம்?''

''நீ... நீ... நீங்க... உங்க வீடு இங்கேயா இருக்கு?'' என்று தடுமாறிக் கேட்டான் அருண்குமார்.

''என் வீட்டுக்காரர் இருக்கற வீடு தானே என் வீடும்?'' நந்தினி புன்முறுவலோடு கேட்டாள். அருண்குமாரைப் பார்க்கும் போது ஒரு குற்ற உணர்வு அவளைத் தாக்கியது. குழந்தையின் கைப் பொம்மையைப் பிடுங்கி விட்டு அதைச் சமாதானப் படுத்த அதன் கவனத்தைத் திசை திருப்பி, 'அங்க பாரு காக்கா, இங்க பாரு கோழி' என்று சொல்லும் பெரியவர்களின் மனநிலையில் அவள் இருப்பது போல் தவித்தாள்.

'' 'ஐ'ஆம் ஸாரி. நீங்க இன்னும் பழைய வீட்லேயே இருப்பீங்கங்கற நெனப்புல கேட்டுட்டேன் . ஐ'ம் வெரி ஸாரி.''

''இதுக்குப் போய் எதுக்கு இவ்வளவு ஸாரி? இது எங்க வீட்டுக்காரரோட பாட்டி. எனக்கும் பாட்டிதான். பேர் கேக்காதீங்க. எனக்குத் தெரியாது.''

''எம்பேரு பட்டம்மா. என் வீட்டுக்காரருதான் இன்னிக்கும் ஆசையா பட்டு, பட்டுன்னு கூப்புடுவாரு. தம்பியை வாசல்லேயே நிக்க வெச்சிப் பேசறியே நந்தினி. வூட்டுக்குள்ளே வரச் சொல்லேன். தம்பி தமக்கு விவரமே பத்தலைன்னு நெனைச்சிக்கிட்டா?''

அருண்குமாருக்குப் பாட்டியைப் பார்த்த மாத்திரத்திலேயே பிடித்துப் போய் விட்டது. பட்டுப் பாட்டி நான்கு வார்த்தை பேசினவுடன் அவளை அவனுக்கு மேலும் பிடித்தது. அதற்கு மேல் பாட்டியிடம் பேச்சு வாங்கிக் கட்டிக் கொள்ளப் பிரியப்படாமல் அவர்கள் போர்ஷனிற்குள் நுழைந்தான்.

கயிற்றுக் கட்டில். எட்டு போல் சுருட்டப்பட்டு தொங்கிய பாட்டியின் புடைவைகள். பாக்கு உரல். இடிக்கும் உலக்கை. மஞ்சள் தேய்க்கப்பட்ட வடுவுடன் கூடிய கருங்கல். மூலையில் கிடந்த தகரப் பெட்டி. எல்லாவற்றையும் பார்த்து அருண்குமாருக்கு அந்த அறையையே ஷூட்டிங் களமாக ஆக்கிக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் பிறந்தது. எளிமை, கூடவே ஓர் அழகு.

தாத்தா கட்டிலின் விளிம்பில் உட்கார்ந்து கவர் பார்த்து 'கப்' 'கப்' என்று அவசர அவசரமாக சிகரெட்டை இழுத்து, அதன் நெருப்பைக் கை விரலால் கிள்ளி அணைத்து, சிகரெட்டை ஒரு பழைய தகர டப்பியில் போட்டார்.

''பாரு, பாரு, இதான் இந்த ஜென்மத்துக்குக் கடைசி பீடி மாதிரி புடிக்கற வேகத்தை. இவரு நம்ப நந்தினிக்கு வேண்டிய புள்ளை. கல்யாணத்துல நான் காபிச் சேனே ஞாபகமிருக்குதா?''

''கல்யாணத்துல நீதான் முன்னால நின்னு ரிசப்ஷன் கமிட்டி தலைவியா இருந்தே... நான் எங்க பாத்தேன்?''

''சரி. நீங்க பாக்கலை. நாந்தான் பாத்தேன். தெரு முக்கு வரைக்கும் போய் ஒலாத்திட்டு வாங்க. சாப்ட்ட பஜ்ஜி ஜீரணம் ஆவட்டும்.''

''என்னைத் தொரத்தியாவணும் இப்போ? அதானே? சரி நான் போறேன். ஆனா வர்றப்ப இன்னிப் பொழுதுக்குன்னு இன்னும் ரெண்டு சிகரெட்டாவது வாங்கிட்டுதான் நொழைவேன் சம்மதமா?''

''திருவிளையாடல்ல பாலையா பேச றாப்பல இருக்குது. எக்கேடா கெட்டுப் போங்க.''

சட்டையின் பட்டன்களை மேலும் கீழுமாக மாற்றிப் போட்டுக் கொண்டு தாத்தா படியிறங்கிப் போனார்.

''நீ ஒக்காரு தம்பி.''

அருண்குமார் கயிற்றுக் கட்டிலில் அமர்ந்தான். தாத்தாவிற்கும், பாட்டிக்கும் இடையே நடந்த உரையாடலில் இருந்த நெருக்கம், ஊடல், தன்னுரிமை, கவலை எல்லாமாகச் சேர்ந்து அவனை ஒரு மாதிரி பிரமிப்பில் ஆழ்த்தியிருந்தன.

''நந்தினி... தம்பிக்கு ஏதாவது குடேன். கேசரி, பஜ்ஜி, காப்பி.''

நந்தினிக்கும் விட்டால் போதும் என்று இருந்தது.

பாட்டி ரொம்பவும் சுட்சுமமானவள். ஒரே ஒரு முடியை மட்டும் வைத்துக் கொண்டு

முழு ஓவியத்தையும் கற்பனை செய்து வரைகிற தேர்ந்த சித்திரக்காரி. வெளியே வந்தவளுக்கு நெஞ்சு புயலில் அகப்பட்ட கொடிக் கம்பத் துணியாய் அடித்துக் கொண்டது.

அருண்குமாருக்கு இந்தப் பக்கம் என்ன வேலை? இங்கே ஏன் வர வேண்டும்? அவனுக்கு அவள் இருக்குமிடம் தெரியவே வாய்ப்பில்லையே. அவளைத் தேடி எல்லாம் வந்திருக்க மாட்டான். அவனைப் பார்த்ததில் உள்ளூர சந்தோஷந்தான். ஊமைக் கனவு போல் வெளிப்படுத்திக் கொள்ள முடியாத சந்தோஷம். அவளைத் தேடி அவன் வந்திருக்க மாட்டான் என்று நெஞ்சு உணர்ந்ததில் நியாயமோ, நியாயமில்லையோ, வருத்தந்தான்.

பஜ்ஜியும், கேசரியும் எடுத்து வரு கையில் பாட்டியின் அறை வாசலில் அவன் குரல் கேட்டுத் தயங்கினாள்.

''அஸிஸ்டெண்ட் டைரக்டர்னா எல்லா வேலையுந்தான் செய்யணும். டைரக்டர் காவடி தூக்கற வீணுக்கு ஒரு நூறு ஜூனியர் ஆர்ட்டிஸ்டுங்க வேணும்னுட்டாரு. இந்தத் தெருவுல ஒரு ஜூனியர் ஆர்ட்டிஸ்ட்டுங்க ஏஜெண்ட் இருக்காரு. அதான் பாத்துட்டுப் போலாம்னு வந்தேன்'' என்று சொல்லிக் கொண்டிருந்தவன், நந்தினி நுழைவதைப் பார்த்ததும் பேச்சை நிறுத்தினான்.

நந்தினி ஸ்டூலை இழுத்துப் போட்டு அதன் மேல் தட்டையும், தண்ணீரையும் வைத்த போது அவன் கண்கள் அவனை யறியாமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தன.

''வந்த இடத்துல நாங்க இழுத்து இங்க உக்கார வெச்சிட்டோம். அப்படித்தானே?''

''சேச்சே. அப்படில்லாம் ஒண்ணுமில்ல. நான் மிஸஸ் நந்தினியையும் பாக்கணும்னு தான் இருந்தேன். ஆபீஸ்ல பாக்கறதுக்குப் பதிலா இங்கயே பாத்துட்டேன். நான் இந்தப் படத்தோட எங்க டைரக்டர்கிட்டேயிருந்து வெலகி வந்துடப் போறேன். புதுப் படம் ஒன்னு டைரக்ட் பண்ணப் போறேன். அதுக்கு மிஸஸ் நந்தினிதான் காஸ்ட்யூம் டிசைன் பண்ணிக் குடுக்கணும்.''

''அதுக்கென்ன. எம் பேத்தி உனக்கில்லாம வேற யாருக்குப் பண்ணப் போவுது?''

''பாட்டி. சும்மாருங்க பாட்டி. ''நீங்க சொல்லிட்டாப் போதுமா. எங்க ஆபீஸ்ல ஒத்துக்குவாங்களோ என்னவோ?''

''சினிமாக்காரங்க செண்டிமெண்ட் நிறையப் பாப்பாங்கன்னு ஒங்களுக்குத் தெரியுமில்ல. என் மொத படத்துக்கு நீங்க தான் காஸ்ட்யூம் டிஸைன் பண்ணணும். எந்த ஒரு முடிவு எடுக்கணும்னாலும் நீங்க மத்தவங்களையே நம்பியிருக்கீங்க. சுயமா முடிவெடுக்கக் கூடாதா?''

''ஆபீஸ்ல ஒரு வார்த்தை கேட்டுக்கிட்டு அவங்களுக்குத் திருப்தியாப் பண்ணிட்டா வேற யாரும் என்னை எதுவும் பேச மாட்டாங்கல்ல?''



''அப்போ நான் வரேன்'' என்று எழுந்து கொண்டான் அருண்குமார்.

''வீட்டுக்குள்ள வரவே இல்லையே. என் நாத்தனார், என் மாமியார் கூடல்லாம் நீங்க பேசவே இல்லியே?''

''இன்னொரு நாளு. எனக்கு இப்ப நேரமில்ல ப்ளீஸ்.''

''சரி.''

அன்றைக்கிரவு. தேவராஜ் வீட்டில் இன்னும் பழைய கோட்பாடுகளில் நம்பிக்கை வைத்திருந்தார்கள். மூன்று நாள் ஓய்வுக்காக நந்தினியை முன்னறையை ஒட்டியிருந்த வராந்தாவில் ஒதுங்கிக் கொள்ளச் சொல்லியிருந்தார்கள். தேவராஜ் எப் போதோ தூங்கிப் போயிருந்தான். நான்தான் இந்த வீட்டுத் தலைவன் என்று சொல்லாமல் சொல்கிற மாதிரி அவனுடைய குறட்டை ஒலி வீட்டை ஆண்டு கொண்டிருந்தது.

தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்த நந்தினி பக்கத்தில் காலடி ஓசை கேட்டுத் திடுக்கிட்டாள்.

''யாரு?'' என்றாள் லேசான திகிலுடன்.

''நான்தான்.''

''பாட்டி நீங்களா? தூக்கம் வரலை?''

''இல்ல. கொஞ்சம் தள்ளிக்க. நான் உக்கார ஒரு பொட்டு எடங் கொடு.''

''நீட்டாச்சே பாட்டி?''

''நீட்டாவது கீட்டாவது. அதெல்லாம் ஒம் மாமியார்கிட்ட.''

''உங்களுக்கு நான் புரட்சிப் பாட்டின்னுதான் பட்டம் கொடுக்கப் போறேன்'' என்றாள் நந்தினி அடக்க முடியாத சிரிப்பினூடே.

இருட்டில் பாட்டியின் உருவம் நிழலாகத் தெரிந்தது. அவளுடைய கண்கள் மட்டும் ஏதோ விளக்கொளி பட்டுப் பளபளத்தன.

''ஆமாண்டி. இல்லன்னா உங்க தாத்தாவை லவ் பண்ணிக் கல்யாணம் பண்ணியிருப்பேனா?''

''என்னது?'' செய்தி அதிசயமாய் இருந்தது. ஆச்சரியமாய் இருந்தது. திகைக்க வைத்தது.

''பதினெட்டு வயசு அப்ப எனக்கு. அப்பா இல்ல. அம்மாவுக்கு நான் ரெண்டாவது பொண்ணு. அஞ்சு வயிறு கழுவியாகணும். கும்மாணத்தில ஒரு ஹோட்டல்ல அம்மா பத்துப் பாத்திரம் தேய்ச்சிட்டிருந்தா. நான் கூடமாட. அப்பத்தான் தாத்தாவைப் பாத்தேன். எப்படி இருப்பாருங்கறே. பொடம் போட்ட மாதிரி ஒடம்பு கம்மா தகதகன்னு மின்னும். கழுத்துல ஒரு மைனர் செயினு. அப்பவே இந்த எளவு பீடிச் சமாச்சாரமும் இருந்தது. அந்த ஆளு கண்ணும் கம்மா இருக்கலை. என்னையே மேய்ஞ்சுது. ஒருநாளு வாயை உட்டே கேட்டுட்டேன்.''



''என்னன்னு?''

''கட்டிக்கிறீங்களான்னுதான்?''

''ம்...'' என்றாள் நந்தினி அடக்க முடியாத ஆர்வத்துடன்.

''இருநிருன்னு முழிச்சாரு. எம்மேல பிரியம் இருக்குதா இல்லியான்னு கேட்டேன்.''

''பிரியம் இருக்குது பட்டு. ஆனா?''

''ஆனாவாவது ஆவன்னாவாவது... என்ன யோசனை?''

''இல்ல பட்டு. நீ வேற ஜாதி. நான் வேற ஜாதி. நீ பேசற பாஷையே வேற.''

''அதனால என்ன? கொழந்தை பொறந்தா ரெண்டு பாஷையும் கத்துக் கட்டுமே.''

''அது சரி. ஒனக்குப் பின்னால பொட்டைப் புள்ளைங்க இருக்குதில்ல. அதுங்களுக்குக் கல்யாணம் ஆகணுமில்ல?''

''இவரு பெரிய சம்சாரி. இத பாருங்க. மனசுக்குப் புடிக்காதவனை அம்மாவுக்குப் புடிச்சதுன்னு கட்டிக்கிட்டா நான் சாவற வரைக்கும் மனசுல முள்ளோடத்தான் இருக்கணும். தங்கச்சிங்கல்லாம் கரையேறாமப் போய்ட மாட்டாங்க. அவங்கவங்க கவலை அவங்கவங்கதான் பட்டுக்கணும். என்ன சொல்றீங்க?ன்னு கேட்டேன். தாத்தா 'சரி'ன்னிட்டாரு. ஓடிப் போய்த் தான் கல்யாணம் பண்ணிக்கிட்டோம். சாமி மலைல கல்யாணம். கொஞ்ச நாளைக்கு எல்லாரும் மூஞ்சைத் தூக்கி வச்சிருந்தாங்க. அதுக்காக யாரும் செத்துப் போயிடலை. சாப்புடாமயும் இருந்துடலை. தங்கச்சிகளுக்கெல்லாம் கல்யாணமும் ஆயிருச்சி. டெய்லி மன்னாடுனாலும் தாத்தா கூடத் தான் சந்தோஷமா இருக்கேன். மஞ்சளை எழைச்சி எழைச்சி பூசிக்கறது எனக்கு எவ்ளோ சந்தோஷமா இருக்குது தெரியுமா?''

''பாட்டி நெஜமாவா சொல்றீங்க?''

''பின்ன ஒனக்காகன்னு இட்டுக்கட்டியா சொல்றேன்? எனக்கு எம் பாஷையே மறந்து போய்டிச்சி. நானும் பேரப் புள்ளையும் பாத்துட்டேன். இதுக்கும் கல்யாணம் கார்த்தில்லாம் பாத்துட்டேன்.''

நந்தினிக்கு மனத்தில் கனம் கூடிக் கொண்டே போனது. ஒரு பாட்டி, மூன்று தலைமுறைகளுக்கு முந்தையவள். எப்படி இருந்திருக்கிறாள்? நான் எப்படி இருந்திருக்கிறேன்? கூடாது; வேண்டாம், என்று எவ்வளவோ தடுத்தும் முடியாமல் அழுகை நீர் கண்ணில் புரண்டது. மதகு திறந்து புதுவெள்ளம் பாய்கிற மாதிரி கன்னத்தில் உருண்டது.

''நீ இந்தக் காலத்துப் பொண்ணு. தைரியமா இருந்திருக்க வேணாம்? அந்தப் பையன் அருண்குமாரைக் கல்யாணம் பண்ணியிருக்க வேணாம்? இப்படித் தோத்துப் போய் உக்காந்திருக்கிறியே?'' என்று நிறுத்தி நிதானமாகக் கேட்டாள் பட்டு பாட்டி.

(தொடரும்)

# வயது 17



கணேச மூர்த்திக்கு, தான் ஒரு துறவி ஆவதா, அல்லது ஒரு பேட்டை ரவுடி ஆவதா என்பதில் பலமான குழப்பம் இருந்தது. வேறு எதுவாகவும் தன்னால் ஆகமுடியுமா என்பதில் சந்தேகம் இருந்தது. அப்பா, அவன் கண்டிப்பாக ஒரு இஞ்சினியர் ஆக வேண்டும் என்பதில் மிகுந்த நம்பிக்கையும், ஆர்வமும் உடையவராக இருப்பது அவன் குழப்பத்தை மேலும் அதிகமாக்கியது.

''இஞ்சினீரிங் படிக்கட்டு ஃபேக்டரிக்கெல்லாம் போக வேண்டாம். பேசாம, அண்ணா யூனிவர்ஸிட்டில லெக்சரரா சேர்ந்துடு'' என்று அம்மா சொன்னாள். அண்ணா யூனிவர்ஸிட்டியில் லெக்சரராகச் சேர்வதும், அகமது பாய் கடையில் உளுத்தம் பருப்பு வாங்குவதும் அவனுக்கு ஒன்றே போலும். ஆயினும் இப்போது அதுவல்ல பிரச்னை. ஒன்று துறவி; அல்லது ரௌடி. இரண்டில் ஒன்றுதான் தனக்கு ஜீவமோட்சம் அளிக்க வல்லது என்று அவன் நம்பினான்.

அவன் விசாரித்து, தெரிந்து கொண்ட அளவில் துறவி ஆவதற்குக் கீழ்க்கண்ட லட்சணங்கள் அவசியம். ஒன்று - மனக்கட்டுப்

பாடு. பக்கத்து வீட்டுத் தேன்மொழியை சைட் அடிப்பதை முதலில் நிறுத்த வேண்டும். இரண்டு - ஒளியும், ஒலியும் உள்ளிட்ட, கீழ்த் தரமான எண்ணங்களை வலுவேற்றும் லாகிரி ஐட்டம்ஸ் ஷ்ட் பி அவாய்டட். மூன்று - யாரிடமாவது 'ஞான தீட்சை' பெற வேண்டும்.

முதல் இரண்டு விஷயங்களைத் தன்னால் செயல்படுத்த முடியும் என அவன் நம்பினான். இந்த ஞான தீட்சை யாரிடம் பெறுவது? அது கடைகளில் விற்பதல்ல என்பதை அவன் அறிவான்.

ரௌடி ஆவது அவனுக்கொன்றும் சிரம காரியமல்ல. தற்போது அவன் வீட்டுக்குத் தெரியாமல் செய்யும் காரியங்களை, தெரிந்து செய்தால் போதுமானது. ஆனால் மேற்படி இரண்டு கேரக்டர்களைத் தவிர, தான் வேறு எதுவாகவும் ஆவதென்பது தற்போதைய சூழ்நிலைக்குப் பொருந்தாதென்பது அவன் துணிவு.

பாழாய்ப் போன பப்ளிக் எக்ஸாம்! நினைத்தது போலவே பிளிக்ஸ் காலைவாரி விட்டது. கணக்கும் ஏறக்குறைய அப்படியே. ஆயினும் இந்த விஷயத்தை அம்மாவிடம் சொல்லியிருக்கவில்லை. அண்ணா யூனிவர்ஸிட்டி லெக்சரர்! சிரிப்பதா? அழுவதா? துறவியா? ரௌடியா?

ஒருவேளை இயற்பியலில் அவன் பாஸ் செய்திருக்கக் கூடிய அளவிற்கு எழுத முடிந்திருந்தால் இத்துறவி அல்லது ரௌடி நிலை ஏற்பட்டிருக்கப் போவதில்லை.

அப்படியே பாஸ் பண்ணி, அப்பா சொன்னபடி இஞ்சினீரிங் இல்லாவிடனும் பி.எஸ்ஸியாவது கிடைத்திருக்கலாம். அம்மா சொன்னபடி அண்ணா யூனிவர்ஸிட்டி லெக்சரர் போஸ்ட் இல்லாவிட்டாலும், அன்னை வேளாங்கன்னியில் ஆறாங்கிளாஸுக்காவது பாடமெடுக்க வாய்ப்புக் கிடைத்திருக்கலாம். இன்னும் இருபத்தைந்து நாட்களில் ரிஸல்ட் வந்து விடப்போகிறது. இப்போதைய நிலை துறவி அல்லது ரௌடியே அன்றி, இஞ்சினீரிங்கோ, வாத்தி உத்யோகமோ அல்ல.

துறவி ஆகிவிடுகிற பட்சத்தில், அம்மா உட்பட அனைவரும் இவன் பிளஸ் டூ பாஸ் பண்ணாததை ஒரு பொருட்டாகக் கருத மாட்டார்கள். இவனுடையதான ஞான மார்க்கப் பிரவேசத்தில் மெய்சிலிர்த்து 'கோட்' அடித்த விவகாரத்தை மறந்து விடக் கூடுமெனக் கருதினான்.

ஆனால் ரௌடி ஆகிற விஷயத்தில் கொஞ்சம் சிரமம் இருக்கிறது. தான் ஒரு ரௌடி என்பதை வீட்டில் எப்படி எஸ்டாப்ளிஷ் பண்ணுவது என்பது முதற்கட்டம். புதிய பாதை பார்த்திபன் பாணியில் கலாட்டா செய்யலாம். ஆனால் அப்பா முன்னால், தன்னால் அது போல் செய்ய முடியுமா என்ற நினைப்பே அவனைக் குலை நடுங்க வைத்தது.

ஆகவே, நோ ரௌடி; ஒன்லி துறவி! அந்த வினாடியே தன் பாவங்கள் அழிந்து பரிசுத்தமாகி விட்டதாகக் கருதிக் கொண்டான்.

இனி அவன் முற்றும் துறந்தவன். யாரோடும் அதிகம் பேசமாட்டான். அடிக்கடி 'மோட்டுவளை'யை வெறித்துப் பார்ப்பான். லுங்கி கட்டமாட்டான். வெள்ளை வேட்டி, வெள்ளைச் சட்டைதான் அணிவான். நீரில் குழைத்து, பட்டையாக விபூதி இடுவான். பக்கத்து வீட்டுத் தேன்மொழியை நோக்குங்கால் 'என் மகளே, நீ வாழி' என ஆசீர்வதிப்பான். கண்டிப்பாக ஒளியும், ஒலியும் பார்க்க மாட்டான்.

அன்று முதல் வேலையாக பஸ் பிடித்து ஊர் எல்லை மடத்துக்குப் போனான். ஓர் இளம் துறவியைப் பிடித்து, தனக்கு தீட்சை கிடைக்குமா என்று விசாரித்தான். துறவி சிரித்தார்.

''நீ ஏன் துறவு பூண விரும்புகிறாய்?''

''பந்த பாசங்களை வெறுக்கிறேன்.''

''துறவிக்கு வெறுப்பு கூடாது தெரியுமா? அன்புதான் வேதம்.''

அவனுக்கு, தான் அந்த டயலாக்கைத் தவிர்த்திருக்கலாம் என்று பட்டது.

''சரி. நீ என்ன படித்திருக்கிறாய்?'' போச்சுடா!

''பிளஸ் டூ.''

''உனக்கு அப்பா, அம்மா இருக்கிறார்களல்லவா? தம்பி, தங்கைகள்?''

இப்படிப்பட்ட சிக்கல்கள் ஏற்படும் என்று அவன் நினைத்திருக்க வில்லை. துறவின் மீதான தன் நாட்டம், ஈடுபாடு கண்டு வியந்து, தீட்சை தந்து, சேர்த்துக் கொண்டு விடுவார்கள் என்று அவன் திடமாகக் கருதியிருந்தான்.

''சன்னியாசம் சாமான்யமானதல்ல சகோதரா.''

''எனக்கு மன உறுதி இருக்கிறது.''

''நல்லது. நீ இருபது நாள் கழித்து வா. குருமகராஜ் வெளியூர் சென்றிருக்கிறார். அவர்

**பா.ராகவன்**

வந்ததும் உன்னை அறிமுகப்படுத்தி வைக்கிறேன்!''

''தீட்சை....?''

''அதெல்லாம் அவர்தான்.''

''நீங்கள் முடியாதா?''

துறவி சிரித்தார். போய்வா நண்பா. இருபது நாள் கழித்து வா.

''என்னை மடத்தில் சேர்த்துக் கொள்வாரா?''

மீண்டும் சிரித்தார்.

''ஆகட்டும் சொல்கிறேன்.''

'அப்பாடா' என்றிருந்தது அவனுக்கு. போகும் போது மறக்காமல் சில ஞான நூல்கள் வாங்கிக் கொண்டான். எதற்கும் இருக்கட்டும் என்று அந்தத் துறவியின் காலில் விழுந்து ஆசி பெற்றான். வீட்டுக்கு வந்து கர்ம சிரத்தையாகப் புத்தகங்களைப் படிக்க ஆரம்பித்தான்.

அம்மா, ''ஏதுடா, இதெல்லாம்?'' என்றாள்.

''பிரெண்ட் குடுத்தான்.''

எடுத்த உடனே பொய்! சே....! துறவி பொய் சொல்லமாட்டான். ஆனால்.... ''வாங்கினேன்'' என்றால் 'காசு ஏது?' என்பாள். இது 'மூணுசீட்டு'ல் வந்த வரவு என்பதை அவள் அறியமாட்டாள். ஆயினும், நல்ல காரியத்திற்குப் பொய் சொல்வது தவறில்லை என்று எண்ணிக் கொண்டான்.

**து**றவு வாழ்க்கை, தான் எண்ணியது போல் அத்தனை எளிதல்ல என்பதை அவன் இரண்டு நாட்களில் கண்டு கொண்டான். ஞாயிறு, டி.வியில் வாத்தியார் படம் என்றதும் மனம் கிடந்து அடித்துக் கொண்டது. தேன்மொழியைப் பார்க்கும் போதெல்லாம் இனம் புரியாத ஏக்கம் பிறந்தது. நண்பர்கள் ரிலீஸ் செய்து ரஜினி படம் போன போது துறவைத் தூக்கி எறியத் தோன்றியது! இருப்பினும் அவன் பொறுத்துக் கொண்டான். 'இந்த சிற்றின்பங்களெல்லாம் நிலையற்றவை. பேரின்பப் பெருவாழ்வே நிலையானது' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டு தீவிர தியானம் செய்ய ஆரம்பித்தான். அவனது திடீர் நடவடிக்கை அம்மாவுக்குக் கவலையாயிருந்தது.



''ச்சே.. சே...வரவர எதைத்தான் கடனாக் கேட்பது என்று ஒரு விவஸ்தையே இல்லாமல் போச்சு...''

''எதைச் சொல்றே நீ...?''

''பக்கத்து வீட்டுக்காரி வந்து ஒரு பழைய புடைவையைக் கடனாக் கேட்டாள். ஸ்டீல் பாத்திரம் வாங்க ஒரு புடைவை குறையுதாம்!''

''என்னடா கண்ணா! உடம்புக்கு ஏதாவது பண்றதா?'' என்றாள். இரவு அப்பாவிடம் ரகசியமாக ஏதோ பேசினாள். அது இவனைப் பற்றித்தான் என்பது இவனுடைய அனுமானம்.

மறு நாள் அப்பா, ''என்னடா, என்னென்னமோ படிக்கிறியாமே. என்ட்ரன்ஸுக்கு ஏதாவது படிச்சாலாவது புண்ணியமுண்டு'' என்றார். தங்கை, ''என்னமோ ஆயிடுத்துப்பா இவனுக்கு'' என்று தலையைத் தொட்டுக் காட்டி, கண் அடித்தாள். அவனுக்கு அவளை நறுக்கென்று குட்ட வேண்டும் போலிருந்தது. ஆனால் துறவி கோபப்பட மாட்டான். மௌனமாகப் புன்னகைப்பான். பேசாமல் நகர்ந்து போய் விடுவான்.

**கா**லை பத்து மணிக்குக் கிருஷ்ணசாமி வந்தான். இவனுடைய பிரெண்ட்.

''மச்சி.... ராமகிருஷ்ணால டக்கர் படம் போட்டிருக்கான்டா. 'மச்சு வீடு,' நாலு 'பிட்டு' காட்றானாண்டா.''

''நிஜமாவா?''

மறக்காதே, துறவி! துறவி!

''ஆமாண்டா. இன்டர்வெல்லுக்கு முன்னாடி மூணு, கடைசில ஒண்ணு.... ரெண்டு பிட்டு அந்த நிமிஷம் ஓட்றானாண்டா. ஜிங்கிடி ஜிக்காதான்!''

'அடேய், கணேசமூர்த்தி! நீ யார்? துறவி யில்லையா? உனக்கெதற்கு மச்சு வீடும், மண்ணாங்கட்டி வீடும்?'

ஆயினும் அவன் சபலப்பட்டான். துறவி வரச் சொன்னதற்கு இன்னும் மூன்று நாட்கள் இருக்கின்றன. கடைசீ... கடைசியாய் ஒரு முழு நீளப்படம் பார்த்தால்தான் என்ன? தவிரவும், துறவி தன்னைச் சேர்த்துக் கொள்ளாமல் பெப்பே காட்டிவிட்டால்?....

அதுவுமன்றி அடிப்படையில் அவன் துறவுக்கு லாயக்கானவன்தானா? அவன் ஒரு ரௌடி. எஸ்டாப்ளிஷ் பண்ண பயப்படும் மனத்தளவிலான ரௌடி. அவனுக்கெதற்குத்

துறவு? தவிரவும் இந்த பதினைந்து நாள் துறவு வாழ்வில் அவன் அடைந்த கஷ்டங்கள் கணக்கில்லை. எனவே துறவு வேண்டாம். அது போலி. இனி அவன் துறவைத் துறப்பான். மக்க வீடு பார்ப்பான்.

"ஒரு நிமிஷம்டா!" என்று உள்ளே ஓடினான். வேஷ்டியை உதறிவிட்டு ஒரு பழைய லுங்கியைச் சுற்றிக் கொண்டான். வெள்ளைச் சட்டை இனி இல்லை. எங்கே டீ ஷர்ட்? Going on my way. பொருத்தமான வாசகம்தான்.

"என்னடா ஆச்சு உனக்கு?" என்ற அம்மாவை, "உன்னை யார் கேட்டா? என் இஷ்டம்!" என்று ஒதுக்கினான். அந்த வினாடி அம்மா முன் தன் ரௌடித்தனத்தைப் பறைசாற்றி விட்டதாக எண்ணி மகிழ்ந்தான். பக்கத்து வீட்டுத் தேன்மொழி தென் படுகிறாளா என்று தைரியமாகப் பார்த்தான்.

தியேட்டரில் ஒரு கௌண்ட்டர் மட்டுமே திறந்திருந்தான். "ஒரே ரேட்டு. அஞ்சு ரூபா. எங்க வேணா உட்காரலாம்." டிக்கெட் கொடுக்க ஆரம்பித்த போது கலவரம் எழுந்தது. இவனை யாரோ இழுத்துத் தள்ள, இவன் அவனை இழுக்க -

அவன் தேர்ந்த ரௌடி போலும்.

"கண்ணு... ஊருக்குப் புச்சா..." என்று பளிச்சென்று இவன் தாடையில் குத்தினான். நாக்கு புளித்தது. பயத்தில் துடை நடுங்கியது. தான் ஒரு 'எஸ்டாப்ளிஷ்ட்' ரௌடி என்பதை மறந்து மானசீகமாய் அவன் மனத்துள் அழுதான்.

தான் ஒரு தேர்ந்த ரௌடியாகத் தகுதியற்றவன் என்பதை அவன் அப்போது உணர்ந்தான். தான் மட்டும் திருப்பி அடித்திருந்தால் தன் கதி என்னவாயிருக்கும் என்பதை எண்ணிப் பார்த்தான். வயிற்றில் ஒரு பாம்புச் சுருள் எழுந்து ஆடியது.

"கூடங்காரன்! நேத்து காட்னான்டா நாலு பிட்டு. இன்னிக்கு என்னடான்னா, இருந்து போத்திக்கினு வர்றானுங்க."

அவனுக்கு, பிட் ஏதும் காட்டாதிருப்பதே நலம் என்று பட்டது. வெளியே வந்தபோது அழுதிருந்தான்.

"சே... துறவுக்கும் லாயக்கில்லை. ரௌடிக்கும் லாயக்கில்லை. படிப்புக்கும் லாயக்கில்லை. என்ன மனிதன் நான்?"

வீட்டுக்குப் போனபோது அப்பா வந்திருந்தார். "எங்கடா போயிட்டு வர? வெள்ளிக்கிழமை ரிசல்ட் வருதாம். மாநிலச் செய்திகள்ல சொன்னான்" என்றார்.

அவன், மொட்டை மாடிக்குப் போய் உட்கார்ந்து 'ஓ' வென அழ ஆரம்பித்தான்.




# கோடையில்

## கந்தன் கருணையில்லை; கண்மணியின் விஷமம்!

கோடை விடுமுறைக்கு வந்திருந்த என் தங்கைக் குடும்பத்துடன் மறுநாள் ஏற்காடு செல்லத் திட்டம். என் ஆறு வயது மகன் ''ஏற்காடு வேண்டாம், கந்தாஸ்ரமம் போவோம்'' என்று அடம்பிடித்த போது அடக்கப்பட்டான்.

அதிகாலை நான்கு மணிக்கு அலாரம் வைத்து விட்டு அன்றிரவு படுத்தோம். கண் விழித்த போது ஆறரை மணி! அலாரம் அடிக்கவில்லை! தாமதத்தால் அருகிருந்த கந்தாஸ்ரமம்தான் போக முடிந்தது. அங்கு விசேஷ பூஜையின் திவ்ய தரிசனம். ''முருகன் அருள்தான் இங்கு வரவழைத்தது'' என்று மகிழ்ந்த போது, ''இல்லம்மா! சீக்கிரம் எழுப்பிக் குளிக்க வைப்பியேன்னு நான்தான் அலாரத்தை ஆஃப் செய்துட்டேன்'' என்றான் மகன். கட்டியணைத்தேன் அவனை.

- எம். மல்லிகா., சேலம் - 1

## திருமயத்தில் உதிர்ந்த திருப்பள்ளியெழுச்சி!

குடும்பத்துடன் திருமயம் சென்றிருந்தேன். அங்குள்ள ஒரு சிறிய மலையில் ஏறிய போது ஒரு பாறை அருகே ஸ்ரீ ரங்கநாதர் போல் சயனித்தான் என் மகன். பத்து வயது மகள் கைகூப்பி அண்ணனுக்குச் சுப்ரபாதம் பாடினாள் :

''திருமயத்தில் பள்ளிகொண்ட வெங்கடேசா எழுந்தருள்வாய்
திருக்கோட்டியூரும் அடுத்துச் செல்ல வேண்டும் எழுந்தருள்வாய்.''

என் மருமகன் இப்படிப் பாடினான் :

''திருமஞ்சனம் காணப் பன்னீரும் கேட்டோனே;
இங்கே தண்ணீரே இல்லை; ஆதலினால் எழுந்தருள்வாய்.''

அச் சமயம் அங்கே ஒரு குரங்கு வர,

''திருக்காட்சி காண அனுமனும் வந்து விட்டான்;
திருவுளம் மகிழ்ந்து சீக்கிரமே துயிலெழுவாய்''

என நான் பாட, சயனித்திருந்த மகன் வாரிச் சுருட்டிக் கொண்டு எழ, ஒரே சிரிப்பு!

- பி. வி. கிருஷ்ணபட்டாச்சார், திருநாகேஸ்வரம்.




## மொத்தவா? முத்தமிடவா!

மதியத் தூக்கத்தினிடையே 'பாட்டி! பாட்டி!' எனக் கீச்சுக் குரலில் எழுப்பிய பரத் பொம்மைக் காரின் ரப்பர் சக்கரத்தை விழுங்கி விட்டதாகச் சொல்லி, வாயில் எடுப்பது போல் சப்தம் செய்ய ஆரம்பித்தான். அவனைத் தனியே விளையாட விட்டு விட்டுத் தூங்கியதற்காக என்னை நானே சபித்துக் கொண்டு, கடவுளுக்குத் துலா பாரம் முதலான பல பிரார்த்தனைகள் நிறைவேற்றுவதாக வேண்டியபடியே, குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு ஆட்டோ பிடிக்க ஓடினேன். தெருவில் இறங்கிய போதுதான் பரத் கையில் கார் பொம்மை இருப்பதைக் கவனித்தேன். அதன் நான்கு சக்கரங்களும் பத்திரமாய் இருந்தன. ''ஏமாந்து போனியா...!'' என்று சிரித்தவனை மொத்துவதா? முத்தமிடுவதா!

- தங்கம், சென்னை - 61.

பொன் விழா
ஆண்டு : தங்க
நகைப் பரிசு : 20

## சார்லி சாப்ளின் சினிமா!

விருந்தினர்களுக்கு லஸ்ஸி தயார் செய்ய மிக்ஸி ஜாடியில் தயிரை ஊற்றிப் பொருத்தி விட்டு அதன் மூடியை எடுத்து வரப் பக்கத்து அறைக்குச் சென்றேன். அதற்குள் என் மகள் மிக்ஸி ஸ்விட்சை 'ஆன்' செய்து விட ஒரே

# ஒரு குறும்பு!



ரகளை, சப்தம். ஓடிப் போய் ஸ்விட்சை அணைத்து விட்டு, மகளைத் திட்டுவதற்காகத் திரும்பினால் அவள் முகமெல்லாம் தயிர் வழிய, திருதிருவெனப் பயத்துடன் விழித்துக் கொண்டிருந்தாள். சார்லி சாப்ளின் படக் காட்சி போல் அறை முழுவதும் திட்டுத் திட்டாகத் தயிர். விருந்தினர் முகங்களிலும் அபிஷேகம்! மிக்ஸியை உபயோகிக்கும்போதெல்லாம் மகளின் இந்த விஷமம் நினைவுக்கு வர என்னையறியாமல் புன்னகைப்பேன்!

- திருமதி ஜே. கே. எஸ்., சென்னை - 97.

## அன்பில்லாத அக்கா!

சித்திக்கு ஒரே தலைவலி. அவர் மகள் ஜண்டு பாம் எடுத்துத் தடவி விட்டாள். அப்படியும் வலி நின்றபாடில்லை. கவனமாக இதைப் பார்த்துக் கொண்டிருந்த சித்தியின் மகன் வாசலில் போய் அப்பாவை எதிர்பார்த்து உட்கார்ந்து கொண்டான். அவர் வந்ததும், ''அக்கா நமக்கு வேண்டாம். அவள் கெட்ட அக்கா'' என்றான்.

''ஏண்டா கண்ணா?''

''ஆமாம், அக்கா ஜண்டு பாம் தடவியும் அம்மாவோட தலைவலி போகலியே...'' என்றான். 'நிறைய அன்பும் கொஞ்சம் ஜண்டு பாமும்' என்ற டீ.வி. விளம்பர வாசகத்தை நினைவில் நிறுத்தி சித்தி தலைவலியையும் மறந்து சிரித்தார். டீ.வி. விளம்பரங்களின் வலிமை என்னைச் சிந்திக்க வைத்தது.

- அழகுலதா நாச்சியார், அழகாபுரி.




## அல்வா துண்டாக ஒரு பதில்

பரீட்சை ரிசல்ட் வந்த பெருமிதத்தில் எங்கள் பத்து வயது மகன். விருந்தினர் முன்னிலையில் ''போன வருஷம் பாஸ் ஆனதுக்கு வாட்ச், இந்த வருஷம் பாஸ் ஆனதுக்கு சைக்கிள் வாங்கித் தர்றேன்... அடுத்த வருஷம் என்ன வேணும்...?'' என்று அவனைக் கேட்ட போது ''பேசாமல் ஒரு கல்யாணத்தைப் பண்ணி வைச்சுடேன்'' என அவன் கூறவும் சிரிப்பில் வீடு அதிர்ந்தது!

- அ. அப்துல் ஹபீஸ், தஞ்சாவூர் - 7.

## வியக்க வைத்த விளக்கம்!

ஃப்ரிஜ் வாங்கிய புதிதில் குட்டி மகளிடம் அதன் உபயோகத்தை விளக்கினேன். இரண்டு நாள் கழித்து என் கணவரின் சாக்ஸ் காணாமல் போக, சல்லடை போட்டுத் தேடி விட்டு மகளிடம் கேட்க, அவள் அதை ஃப்ரிஜ்ஜின் கிரிஸ்பர் ட்ரேயிலிருந்து எடுத்துத் தந்தாள். ''அப்பா இந்த வெயிலில் ஷூவும் ஸாக்ஸும் போட்டுக்க பயங்கரமா இருக்குன்னு சொன்னாரில்லை; அதனால்தான் ஸாக்ஸ் ஜில்லுனு இருக்கட்டும்னு ஃப்ரிஜ்ஜில வைச்சேன். ஷூஸ் பயங்கர 'டர்டி'; அதான் வைக்கலே...'' என்று தன் குறும்புக்கு விளக்கமும் தந்தாள்!

- மைதிலி பரமேசுவரன், சேலம் - 7.

பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள தங்கக் நகைப் பரிசு பெறுபவர் :

- எம். மல்லிகா,
98, பபப அக்ரஹாரம்,
சேலம் - 1,

## சின்ன பசங்க நாங்க



எதிர்ப் பக்கத்தில் உள்ள 'ஊர் மரியாதை' பட விமர்சனத்தின் கடைசிப் பாராவைப் பார்க்கவும்.

# ஊர் மரியாதை

**ப**க்கத்தில் அமர்ந்து படம் பார்த்த நண்பருக்கு வாயை வைத்துக் கொண்டு சும்மா இருக்க முடியவில்லை. டைட்டிலைப் பார்த்தவுடனேயே ஆரம்பித்து விட்டார்.

''தலைப்பைப் பார்த்தாலே தெரியுது. கிராமத்துக் கதைதான்னு. அம்மன் கோயில் திருவிழா... அதுல ஊர் மரியாதை யாருக்குன்னு ஹீரோவுக்கும் வில்லனுக்கும் போட்டி... வழக்கம் போல ஹீரோ வெற்றியடைய, வில்லனின் விரோதம் அதிகப்படும்'' என்றார்.

அப்படித்தான் படம் தொடங்கியது.

''ஒரு கிராமத்துக் கதைன்னா அதனோட லட்சணம் என்ன தெரியுமா? தீமிதி, குடம் நிறைய மஞ்சள் நீருடன் இளம் பெண்கள், வேப்பிலைக் கொத்துக்கள் இதெல்லாம் அப்பப்போ இடம்பெறணும்.''

அப்படியே இடம் பெற்றன.

''வில்லன் எப்படி தெரியுமா? பண பலமும் படை பலமும் நிறைஞ்சு, பார்க்கிற இளம் பெண்களையெல்லாம் அடைய முயற்சி செய்யணும். வாழ்க்கையில வில்லனுக்கு இதைத் தவிர வேறே வேலையே இல்லைங்கற மாதிரி காட்சிகள் அமையணும்.''

அப்படித்தான் அமைந்திருந்தன.

''அப்புறம், தமிழ்ப் பெண்களுக்கும் தாலி செண்டிமெண்ட்டுக்கும் நெருங்கின சம்பந்தம் உண்டு. ஆகையினால, தாலி தொடர்பான நிகழ்ச்சிகள் ஒண்ணு ரெண்டு இடம்பெறணும்.''

இடம்பெற்றிருந்தன. ஊர்ப் பஞ்சாயத்தின் முன்னிலையில், அவர்களுடைய தீர்ப்பின்படி, பெண்கள் தாங்கள் வாழ விரும்பாத கணவர்களின் கைகளில் அவர்கள் கட்டிய தாலியைத் தாமே கழற்றிக் கொடுத்து விடுகிறார்கள்!

''சொல்ல மறந்துட்டேனே! கதாநாயகனுக்குப் படிப்பறிவு இருக்கக் கூடாது. கதாநாயகி மட்டும் ஆங்கிலம் எழுதப் படிக்கத் தெரிந்தவளா இருக்கணும். இது எப்படியென்று கேட்கக் கூடாது.''

இருந்தது. கேட்கவில்லை.

''அப்புறம், பாட்டெல்லாம் கூட எப்போதோ எங்கேயோ கேட்ட மாதிரியே இருந்தா நல்லது. அப்போதான் பாட்டு பாப்புலர் ஆகும்னு நம்ப முடியும்.''

நம்பியிருப்பது தெரிந்தது.

''படத்தின் வெற்றிக்கு நகைச்சுவை ரொம்பவும் முக்கியம். கவுண்டமணி - செந்தில்... ரெண்டு பேரும் ஒரே பெண்ணைச் சுத்திச் சுத்தி வரணும். செந்திலின் தலையை ரகம் ரகமாய் கவுண்டமணி வர்ணிப்பார். அவ்வப்போது எட்டி உதைப்பார்.''

சுத்தி வந்தார்கள். வர்ணித்தார். எட்டி உதைத்தார்.

படத்தில் ஈடுபட முடியாமல் நண்பர் வழங்கி வந்த வருமுன் உரையைப் பொறுக்க முடியாமல், ''இந்தப் படத்தை இதுக்கு முன்னாலேயே பார்த்திருக்கீங்களா?'' என்று கேட்க, அவர் சொன்ன பதில் :

''இதை இப்போதான் முதல் தடவையா பார்க்கிறேன். ஆனா, இதுவரைக்கும் வந்திருக்கிற எல்லாப் படங்களையும் பார்த்திருக்கேனே! பாத்திரங்களின் பெயர்கள் மாறலாம். நடிக - நடிகையர் மாறலாம். படப்பிடிப்பு நடைபெறும் கிராமங்கள் மாறலாம். கதையை எடுத்துச் சொல்லும் உத்தி - படப்பிடிப்பு உத்தி - தொழில்நுட்ப அணுகுமுறை ...இதெல்லாம் மாறலாம். ஆனால் கதை மட்டும் மாறுவதில்லை. அரைத்த மாவே திரும்பத் திரும்ப ஒவ்வொரு படத்திலும் அரைபடுகிறது.''

- சி. ஆர். கே.

---

செம்பருத்தி

ஏராளமான செலவில் ஏழை - பணக்காரக் காதல் கதை

விவரங்களுக்கு... காண்க பக்கம் 46

# சிவகாமியின் சபதம்

## மூன்றாம் அத்தியாயம்

## ருத்ராச்சாரியார்

காஞ்சி நகரமானது முன்னம் மகேந்திரவர்ம சக்கரவர்த்தியின் காலத்தில் இருந்ததுபோல் கலைமகளும் திருமகளும் குதூகலமாகக் கொலுவீற்றிருக்கும் பெருநகரமாக இப்போது விளங்கியது.

இருபுறமும் கம்பீரமான மாடமாளிகைகளையுடைய விசாலமான வீதிகளில் எப்போது பார்த்தாலும் 'ஜே ஜே' என்று ஜனக்கூட்டமாயிருந்தது. மாடு பூட்டிய வண்டிகளும், குதிரை பூட்டிய ரதங்களும் மனிதர் தூக்கிய சிவிகைகளும் ஒன்றையொன்று நெருங்கி வீதியையும் அடைத்தன.

ஸ்திரீகளும் புருஷர்களும் விதவிதமான வர்ணப் பட்டாடைகளும் ஆபரணங்களும் அணிந்து அங்குமிங்கும் உலாவினார்கள்.

ஆலயங்களிலே பூஜாகாலத்து மணி ஓசையும் மங்கள வாத்தியங்களின் கோஷமும் இடைவிடாமற் கேட்டுக் கொண்டிருந்தன.

சம்ஸ்கிருத கடிகைகளில் வேத மந்திரங்களின் கோஷமும் சைவத் தமிழ் மடங்களில் நாவுக்கரசரின் தெய்வீகமான தேவாரப் பாசுரங்களின் கானமும் எழுந்தன.

சிற்ப மண்டபங்களில் கல்லுளியின் 'கல் கல்' ஒலியும், நடன மண்டபங்களில் பாதச் சதங்கையின் 'ஜல் ஜல்' ஒலியும் எழுந்து கலைப்பற்றுள்ளவர்களின் செவிகளுக்கு இன்பமளித்தன.

வீதிகளை நிறைத்திருந்த ஜனக்கூட்டத்தில் இடையிடையே கத்தி கேடயங்களைத் தரித்த போர்வீரர்கள் காணப்பட்டார்கள். அவர்கள் எதிர்ப்புறமாக வரும் வீரர்களைச் சந்திக்கும்போதெல்லாம் ஒருவருடைய கத்தியை ஒருவர் தாக்கி முகமன் கூறிக் கொண்டார்கள்.

இவ்வாறு வீரர்கள் சந்திக்கும் இடங்களிலெல்லாம் ஜனங்கள் கூடி, ''மாமல்லர் வாழ்க!'', ''புலிகேசி வீழ்க!'' ''காஞ்சி உயர்க!'', ''வாதாபி அழிக!'' என்ற கோஷங்களை எழுப்பினார்கள்.

கலகலப்பு நிறைந்த காஞ்சி நகரின் வீதி களின் வழியாக மாமல்ல சக்கரவர்த்தியின் ரதம் சென்று, பிரசித்திபெற்ற ருத்ராச்சாரியாரைத் தலைமை ஆசிரியராகக் கொண்ட சம்ஸ்கிருத கடிகையின் வாசலை அடைந்து நின்றது.

உள்ளேயிருந்து ஆசிரியரும் மாணாக்கருமாகச் சிலர் வெளிவந்து ''ஜய விஜயீ பவ!'' என்று கோஷித்துச் சக்கரவர்த்தியை வரவேற்றார்கள். மாமல்லரும், மானவன்மனும் கடிகைக்குள்ளே பிரவேசித்தார்கள்.

அந்த நாளில் பரதகண்டத்திலேயே மிகப் பிரபலமாக விளங்கிய அந்தச் சர்வ கலாசாலையின் கட்டடம் மிக விஸ்தாரமாயிருந்தது. அழகான வேலைப்பா டமைந்த தூண்கள் தாங்கிய மண்டபங் களிலே ஆங்காங்கு வெவ்வேறு வகை வகுப்புக்கள் நடந்து கொண்டிருந்தன.

ரிக்வேதம், யஜுர்வேதம், சாமவேதம் ஆகியவற்றை வெவ்வேறு மண்டபங்களில் தனித்தனியாக வித்தியார்த்திகள் அத்தியயனம் செய்து கொண்டிருந்தார்கள்.

வேதங்களிலும் வேதாகமங்களிலும் பூரணப் பயிற்சியுள்ள ஆசிரியர்கள் அந்தக் காலத்தில் காஞ்சி கடிகையிலேதான் உண்டு என்பது தேசமெங்கும் பிரசித்தமாயிருந்தது.

இன்னும் வெவ்வேறு மண்டபங்களில் சாஸ்திர ஆராய்ச்சியும், காவிய படனமும் நடந்து கொண்டிருந்தன.

ஒரு மண்டபத்தில் வியாகரண சாஸ்திரம் படித்துக் கொண்டிருந்தார்கள். மற்றொரு மண்டபத்தில் வால்மீகி இராமாயணம் படிக்கப்பட்டது. இன்னொரு மண்டபத்தில் பகவத் கீதை பாராயணம் நடந்தது. வேறொரு மண்டபத்தில் காளிதாசனுடைய சாகுந்தல நாடகத்தை மாணவர்கள் நாடகமாக நடித்துக் கொண்டிருந்தார்கள்.

இதெல்லாவற்றையும் பார்த்துக் கொண்டும் கேட்டுக் கொண்டும் மாமல்லரும் மானவன்மனும் மேலே சென்றார்கள்.

கடைசியாக அவர்கள் வந்து சேர்ந்த மண்டபம், சிறிதும் சந்தடியில்லாத நிசப்தமான ஒரு மூலையில் இருந்தது. அந்த மண்டபத்தின் மத்தியில் போட்டிருந்த கட்டிலில், கிருஷ்ணாஜினத்தின் மீது ஒரு தொண்டுக் கிழவர் சாய்ந்து படுத்திருந்தார். தும்பை மலர்போல நரைத்திருந்த அவருடைய தாடி நீண்டு வளர்ந்து தொப்புள் வரையில் வந்திருந்தது. அவருடைய சடா மகுடம் வெள்ளை வெளேரென்று இலங்கியது. இந்தக் கிழவர் தான் அந்தப் புகழ்பெற்ற சம்ஸ்கிருத கடிகையின் தலைவர் ருத்ராச்சாரியார். அவர் படுத்திருந்த கட்டிலுக்கருகில் ஆசிரியர்கள் நாலுபேர் தரையிலே உட்கார்ந்து தைத்திரீய உபநிஷதம் பாடம் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

மாமல்லரின் வருகையைப் பார்த்ததும் அவர்கள் பாடத்தை நிறுத்திவிட்டு எழுந்து சக்கரவர்த்திக்கு வணக்கம் செலுத்திவிட்டு அப்பால் சென்றார்கள்.

''பல்லவேந்திரா! தங்களை எழுந்து வரவேற்பதற்கும் அசக்தனாகப் போய் விட்டேன். மன்னிக்க வேணும். விஜயதசமியன்று புறப்படுகிறீர்கள் அல்லவா?'' என்று ஆச்சாரியார் கேட்டார்.

''புறப்படுவதற்கு எல்லா ஆயத்தமும் ஆகிவிட்டது. ஆனால், பாண்டிய குமாரன் இன்னும் வந்து சேரவில்லை. வராக நதிக் கரையிலேயே தங்கியிருக்கிறான். ஏதோ தேக அசௌக்கியம் நேர்ந்து விட்டதாம்!''

''பிரபு! பாண்டியன் வந்தாலும், வராவிட்டாலும் நீங்கள் விஜயதசமியன்று கிளம்பத் தவற வேண்டாம். இந்த விஜய தசமி போன்ற கிரக நட்சத்திரச் சேர்க்கை ஆயிரம் வருஷத்துக்கு ஒரு தடவைதான் ஏற்படும். இராமபிரான் இலங்காபுரிக்குப் படையெடுத்துப் புறப்பட்டது இம்மாதிரி நாளிலேதான்.''

''அப்படியானால் இராமபிரானைப் போலவே நானும் வெற்றியுடன் திரும்புவேன் அல்லவா?'' என்று மாமல்லர் கேட்டார்.

''அவசியம் விஜய கோலாகலத்துடன் திரும்புவீர்கள். ஆனால், அதைப் பார்க்கும் பாக்கியம் எனக்குக் கிட்டாது.''

''குருதேவா! அப்படிச் சொல்லக் கூடாது!'' என்று மாமல்லர் பரிவுடனே கூறினார்.

''அதனால் என்ன? நான் இவ்வுலகை விட்டு மேல் உலகம் போன போதிலும் இந்தக் காஞ்சியையும் கடிகையையும் என்னால் மறந்திருக்க முடியாது. மாமல்லரே! தாங்கள் வாதாபியிலிருந்து திரும்பிவரும் நாளில் நான் தங்கள் தந்தை மகேந்திர சக்கரவர்த்தியையும் அழைத்துக் கொண்டு இந்தக் கடிகைக்கு மேலே வந்து நிற்பேன். நாங்கள் இருவரும் தேவலோகத்துப் பாரிஜாத மலர்களைத் தூவித் தங்களை வரவேற்போம்'' என்று ருத்ராச்சாரியார் கூறியபோது மாமல்லரின் கண்கள் கலங்கிக் கண்ணீர் கசிந்தது.

## நான்காம் அத்தியாயம்

# நாவுக்கரசர்

ஏகாம்பரேசுவரர் கோயில் சந்நிதியில் இருந்த சைவத் திருமடத்திலும் அன்று மிக்க கலகலப்பாக இருந்தது.

திருநாவுக்கரசர் பெருமான் சில நாளாக அந்த மடத்தில் எழுந்தருளியிருந்தார். அப்பெரியாரின் இசைப்பாடல்களை மாணாக்கர்கள் பாடிக் கொண்டிருந்தார்கள். கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக நாவுக்கரசர் அப் பாடல்களைக் கேட்டுக் கொண்டிருந்தார். அவருக்கு அருகில் அமர்ந்திருந்த ஆயனச் சிற்பியின் கண்களும் கசிவுற்றிருந்தன.

ஏகாம்பரேசுவரர் கோயிலில் உச்சிக் கால பூஜைக்குரிய மணி அடித்தது; பேரிகை முழக்கமும் கேட்டது.

மாணாக்கர்கள் பதிகம் பாடுவதை நிறுத்தி உணவு கொள்வதற்காகச் சென்றார்கள்.

நாவுக்கரசரும் ஆயனரும் மட்டும் தனித்திருந்தார்கள்.

''சிற்பியாரே! பத்து வருஷத்துக்கு முன்னால் இதே இடத்தில் உம்முடைய புதல்வி அபிநயம் பிடித்தாள். அந்தக்காட்சி என் கண் முன்னால் இன்னமும் அப்படியே நிற்கிறது. 'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்' என்று மாணாக்கர்கள் சற்றுமுன் பாடியபோது உம் புதல்வியை எண்ணிக் கொண்டேன். என்னை அறியாமல் உடனே கண்ணீர் பெருகிவிட்டது'' என்றார்.

''அடிகளே! எனக்கும் அந்த நினைவு வந்தது; அன்றைக்கு நாங்கள் புறப்படும் போது என்னைப் பின்னால் நிறுத்தித் தாங்கள் எச்சரித்தபடியே நடந்துவிட்டது.''

''ஆம், ஆயனரே! எனக்கும் அது ஞாபகம் வருகிறது. 'இப்பேர்ப்பட்ட தெய்வீகக் கலைத்திறமை பொருந்திய பெண்ணுக்கு உலக வாழ்க்கையில் கஷ்டம் ஒன்றும் வராமல் இருக்க வேண்டுமே!' என்ற கவலை ஏற்பட்டது. அதைத்தான் உம்மிடம் சொன்னேன்.''

''சுவாமி, தங்களுடைய திரு உள்ளத்தில் உதயமான எண்ணம் எவ்வளவு உண்மையாய்ப் போய்விட்டது! சிவகாமிக்கு வந்த கஷ்டம் சொற்பமானதா? கனவிலும் எண்ணாத பேரிடியாக அல்லவா என் தலையில் விழுந்து விட்டது? பச்சைக் குழந்தையாகத் தொட்டிலில் கிடந்தபோதே அவளை என்னிடம் ஒப்புவித்துவிட்டு அவள் தாயார் கண்ணை மூடிவிட்டாள். அது முதல் பதினெட்டு வயது வரையில் என் கண்ணின் மணியைப் போல் அவளைப் பாதுகாத்தேன்; ஒரு நாளாவது நாங்கள் ஒருவரையொருவர் பிரிந்து இருந்ததில்லை. அப்படி வளர்த்த குழந்தையைப் பிரிந்து இன்றைக்கு ஒன்பது வருஷமாயிற்று. இன்னமும் உயிரை வைத்துக் கொண்டிருக்கிறேன். அடிகளே! ஒரு பாவமும் அறியாத எங்களைக் கருணைக் கடலான பெருமான் ஏன் இத்தகைய சோதனைக்கு ஆளாக்கினார்? தாங்கள் இறைவனுக்கு என்ன அபசாரம் இழைத்தோம்?'' என்று ஆயனர் கேட்ட போது, அவருடைய கண்களிலிருந்து கலகலவென்று கண்ணீர் பொழிந்தது.

''ஆயனரே! வருந்த வேண்டாம். இறைவனுடைய திருவுள்ளத்தின் இரகசியங்களை மானிடர் அறிவது கடினம். அடியேனும் என் மனமறிந்து இந்தப் பூவுலகில் யாருக்கும் எந்தத் தீமையும் செய்ததில்லை. ஆயினும் இந்தச் சட உடலும் எத்தனையோ துன்பங்களை அநுபவித்தது. சிற்பியாரே! அடியேன் கண்ட உண்மையை உமக்குச் சொல்கிறேன். நாம் துன்பம் என்று நினைப்பது உண்மையில் துன்பம் அல்ல! இன்பம் என்று கருதுவது உண்மையில் இன்பம் அல்ல. இன்ப துன்ப உணர்ச்சியானது உலக பாசத்தினால் ஏற்படுகிறது. இந்தப் பாசத்தைத்தான் பெரியோர் மாயை என்கிறார்கள். மாயை நம்மைவிட்டு அகலும் போது இன்பமும் இல்லை, துன்பமும் இல்லை என்பதை அறிவோம். அந்த இறைவனுடைய திருவருளாகிய பேரின்பம் ஒன்றுதான் மிஞ்சி நிற்கக் காண்போம்.''

''சுவாமி! தங்களுடைய அமுத மொழிகளில் அடங்கிய உண்மையை நான் உணர்கிறேன். ஆயினும், என்னைவிட்டுப் பாசம் அகலவில்லையே? என்ன செய்வேன்?''

''பாசம் அகலுவதற்கு வழி இறைவனை இறைஞ்சி மன்றாடுவதுதான்!''



என்றார் நாவுக்கரசர்.

''நான் மன்றாடவில்லையா? மன்றாடியை எண்ணி, இடை விடாமல் மன்றாடிக் கொண்டுதானிருக்கிறேன். ஆயினும் என் மகள் மேல் உள்ள பாசம் விடவில்லையே! ஈசனைப் பிரார்த்திக்க நினைக்கும் போதெல்லாம் தூர தேசத்திலே, பகைவர்களின் கோட்டையிலே சிறையிருக்கும் என் மகளின் நினைவுதானே வருகிறது? 'இறைவா! என் மகளைக் காப்பாற்று. என் வாழ்நாள் முடிவதற்குள்ளாகச் சிவகாமியை இந்தக் கண்கள் பார்க்கும்படி கருணை செய்!' என்றுதானே வரங்கேட்கத் தோன்றுகிறது! என்ன செய்வேன்!'' என்று ஆயனர் கூறி விம்மினார்.

''வேண்டாம், ஆயனரே! வருந்த வேண்டாம்!'' என்று அவருக்கு ஆறுதல் கூறினார், உழவாரப்படை தரித்த உத்தமர். மேலும், ''உமது மனோரதந்தான் நிறைவேறப் போகிறதே. மாமல்ல சக்கரவர்த்தி வாதாபி படையெடுப்புக்குப் பெரும் படை திரட்டியிருக்கிறாரே? இறைவன் அருளால் உம் மகள் திரும்பி வந்து சேருவாள். கவலைப் பட வேண்டாம். அதுவரையில் நீர் என்னுடன் இந்த மடத்திலேயே தங்கியிருக்கலாமே? அரண்ய வீட்டில் தனியாக ஏன் இருக்கவேண்டும்?'' என்றார்.

''அடிகளே! மன்னிக்க வேண்டும். பல்லவ சைனியத்தோடு நானும் வாதாபிக்குச் செல்கிறேன்....'' என்று ஆயனர் கூறியது வாகீசருக்குப் பெரும் வியப்பை அளித்தது.

''இதென்ன, ஆயனரே? போர்க்களத்தின் பயங்கரங்களைப் பார்க்க ஆசை கொண்டிருக்கிறீர்களா? மனிதர்களின் இரத்தம் ஆறுபோல் ஓடுவதைப் பார்க்க விரும்



புகிறீரா? வெட்டப்பட்டும் குத்தப்பட்டும் கால் வேறு, கை வேறு, தலை வேறாகக் கிடக்கும் சடலங்களைப் பார்க்கப் பிரியப்படுகிறீரா?'' என்று பெருந்தகையார் வினவினார்.

ஆயனர் சிறிது வெட்கமடைந்தவராய், ''இல்லை அடிகளே! அதற்காகவெல்லாம் நான் போகவில்லை. என் மகளைப் பார்த்து அழைத்து வரலாமே என்ற ஆசையினாலே தான் போகிறேன்'' என்றார்.

இந்தச் சமயத்தில் மடத்தின் வாசற் புறத்திலிருந்து சில ஸ்திரீ புருஷர்கள் வந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் நமக்கு ஏற்கெனவே தெரிந்தவர்கள்தான்.

சேனாதிபதி பரஞ்சோதி, அவருடைய மனைவி உமையாள், நமசிவாய வைத்தியர், அவருடைய சகோதரி ஆகியவர்கள் உள்ளே வந்து நாவுக்கரசருக்கு நமஸ்கரித்தார்கள்.

எல்லாரும் உட்கார்ந்த பிறகு, நமசிவாய வைத்தியர், ''சுவாமி விடைபெற்றுப் போக வந்தேன்'' என்றார்.

''ஆகா! ஊருக்குத் திரும்பிப் போகிறீர்களா? எனக்குக் கூடத் திருவெண்காட்டு இறைவனைத் தரிசிக்க வேண்டுமென்றிருக்கிறது. மறுபடியும் சோழ நாட்டுக்கு யாத்திரை வரும்போது தங்கள் ஊருக்கு வருவேன்'' என்றார் வாகீசர்.

''இல்லை, அடிகளே! நான் திருவெண்காட்டுக்குப் போகவில்லை. வடக்கே வாதாபி நகருக்குப் போகிறேன்.''

''இது என்ன! காஞ்சி நகரிலே ஒருவருமே மிஞ்சமாட்டார்கள் போலிருக்கிறதே? ஆயனர்தாம் அவருடைய மகளை அழைத்து வருவதற்காகப் போகிறார்; நீர் எதற்காகப் போகிறீர் வைத்தியரே?''

''வைத்தியம் செய்வதற்குத்தான் போகிறேன், சுவாமி! சைனியத்தோடு ஒரு பெரிய வைத்தியர் படையும் போகிறது. அதன் தலைவனாக நானும் போகிறேன். சளுக்கர்கள் தர்ம யுத்தம் அதர்மயுத்தம் என்ற வித்தியாசம் இன்றி யுத்தம் செய்கிறவர்கள். முனையில் விஷம் ஏற்றிய வாள்களையும் வேல்களையும் உபயோகிப்பவர்கள். நம் மகேந்திர சக்கரவர்த்தி மீது விஷக்கத்தி பாய்ந்த செய்தி தங்களுக்குத் தெரியுமே? சக்கரவர்த்திக்குச் சிகிச்சை செய்தபோது அந்த விஷத்துக்கு மாற்றுக் கண்டு பிடித்தேன். அதன் பயனாக, யுத்தத்துக்கு நானும் வரவேண்டுமென்று பல்லவ சேனாதிபதியின் கட்டளை பிறந்தது!'' என்று கூறிய நமசிவாய வைத்தியர், சேனாதிபதி பரஞ்சோதியைப் பெருமையுடன் பார்த்தார்.

''ஆ! இந்தப் பிள்ளைதான் தேசமெல்லாம் பிரசித்தி பெற்ற பல்லவ சேனாதிபதியா?'' என்று கூறித் திருநாவுக்கரசர் பரஞ்சோதியை உற்றுப் பார்த்தார். ''இவனுடைய முகத்தில் சாத்விகக் களை விளங்குகிறதே? மகோந்நதமான சிவ பக்திப் பெருஞ் செல்வத்துக்கு உரியவனாகக் காணப்படுகிறானே? இவன் ஏன் இந்த கொலைத் தொழிலில் பிரவேசித்தான்?'' என்று வினவினார்.

இதைக் கேட்டதும் நமசிவாய வைத்தியரும் அவருடைய சகோதரியும் ஒருவரையொருவர் பார்த்துப் புன்னகை புரிந்தார்கள். உமையாளும் தன் கணவனுடைய முகத்தைச் சிறிது நாணத்துடன் பார்த்துக் குறுநகை புரிந்தாள். பரஞ்சோதியின் முகத்திலும் புன்னகை தோன்றவில்லையென்று நாம் சொல்லமுடியாது.

''சுவாமி! தங்களுடைய திருமடத்தில் சேர்ந்து தமிழ்க்கல்வி கற்பதற்காகத்தான் இவனைப் பன்னிரண்டு வருஷத்துக்கு முன்னால் காஞ்சிக்கு அனுப்பினோம். விதியானது இவனை இந்த நிலைக்குக் கொண்டு சேர்த்தது. இவனோடு என்னையும் சேர்த்துக் கட்டிப் போர்க்களத்திற்கு இழுக்கிறது'' என்றார்.

''நாவுக்கரசர் பரஞ்சோதியை இன்னொரு முறை உற்றுப் பார்த்துவிட்டு, ''இவனையா விதி இழுத்துச் செல்கிறது என்கிறீர்கள்! விதியையே மாற்றி அமைக்கக் கூடிய உறுதி படைத்தவன் என்று இவன் முகக் களை சொல்கிறதே?'' என்றார்.

தளபதி பரஞ்சோதி அந்தக்கணமே எழுந்து திருநாவுக்கரசரின் அடிபணிந்து, ''குருதேவரே! தங்களுடைய திருவாக்கை ஆசிமொழியாகக் கொள்கிறேன்!'' என்று சொன்னார்.

பரஞ்சோதியின் தாயார் அப்போது எழுந்து நின்று வணக்கத்துடன், ''சுவாமி! முன்னொரு சமயம் தாங்கள் திருவெண்காட்டுக்கு வந்திருந்தபோது இவள் தங்களை நமஸ்கரித்தாள். 'சீக்கிரம் விவாகம் ஆகவேண்டும்' என்று கூறினீர்கள். அதன்படியே விவாகம் நடந்தது'' என்று சொல்லி நிறுத்தினாள்.

''என் வாக்குப் பலித்தது பற்றி மிகவும் சந்தோஷம், அம்மா!'' என்றார் வாகீசப் பெருமான்.

''தங்களுடைய திருவாக்கிலே எது வந்தாலும் அது பலிக்கும். கருணை கூர்ந்து இவளுக்குப் புத்திர பாக்கியம் உண்டாகும்படி ஆசீர்வதிக்க வேண்டும்'' என்று அந்த மூதாட்டி கூறினாள்.

திருநாவுக்கரசர் மலர்ந்த முகத்துடன் பரஞ்சோதியையும் உமையாளையும் பார்த்தார். கதைகளிலும் காவியங்களிலும் பிரசித்தி பெறப்போகும் உத்தமமான புதல்வன் இவர்களுக்கு உதிப்பான்!'' என்று அருள் புரிந்தார்.

(தொடரும்)

# கிருஷ்ணகிரி வசந்தன்

நடராஜன் வாசலை அடைக்கிறாற்போல வாசலுக்குக் குறுக்காய் மடக்கு நாற்காலியைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தார். உள்ளே வாசுவின் மனைவி பிள்ளைகளைத் திட்டிக் கொண்டிருந்தாள்.

''மணி ஒன்பதரை ஆச்சுன்னு தெரியுதில்லை. சீக்கிரம் சாப்பிட்டுட்டுக் கிளம்புங்கடா. அப்புறம் டீச்சர் அடிச்சா வெளியே நிற்க வைச்சான்னு ஒப்பாரி வைக்காதீங்க.''

நடராஜன் கண்ணை மூடிக்கொண்டார். நாற்காலியில் தலையைச் சாய்த்தார்.

''ஆனந்தக்கூத்தனை அம்பலத்தானை
அற்புதத்தேனை எம் ஆதிப்பிரானைத்
தேனந்தக்கொன்றை அம் செஞ்சடை
யானை.....''

உரக்கப் பாடினார். இதைக் கேட்டதும் உள்ளேயிருந்து கூச்சல் வந்தது.

''உன் தாத்தாவை வந்து டிபன் பண்ணச் சொல்லுடா. காலங்கார்த்தாலே அவனவனுக்கு ஆயிரம் வேலை. இவரு வாயைப் பிளந்துகிட்டு உட்கார்ந்துட்டாரு. அப்புறம் உங்கப்பா வந்த பின்னாடி உம் பொண்டாட்டி எனக்குக் கல்லாட்டம் இட்லி பண்ணிப் போட்டான்னு குறை சொல்லுவாரு. நேரத்துக்குச் சாப்பிட்டா பரவாயில்லை. பன்னண்டு மணிக்கு டிபன் பண்றது, நாலு மணிக்குச் சாப்பிடறது!''

அவள் நேரடியாய் அவரிடம் எதுவும் பேசுவதில்லை. பிள்ளைகளிடம் சொல்வது போல உரக்கச் சொல்வாள்.

நடராஜன் அமைதியாய்க் கேட்டுக் கொண்டார். கண்களுக்குள் காட்சிகள் மாறி மாறித் தெரிந்தன.

முப்பது வருடங்களுக்கும் மேலாய் ஓடி ஓடி உழைத்தாயிற்று. ஞாயிற்றுக்கிழமைகளிலும், பொங்கல், தீபாவளி எனப் பண்டிகை நாட்களும் தவிர மற்ற நாட்களில் ஒன்பது மணிக்குள் தயாராகி அலுவலகத்திற்குப் போய் இயந்திரமாய் உழைத்து ஐந்தரைக்கு வீடு திரும்பி....

அந்தக் கஷ்டமெல்லாம் தீர்ந்து விட்டது. இத்தனை வருட உழைப்பிற்கு மொத்தமாய் ஓய்வு கிடைத்தாயிற்று.

நிரந்தர ஓய்வு. நடராஜன் அதற்கு முன்னேயே கணக்குப் போட்டு வைத்திருந்தார்.

மாதாமாதம் வரும் ஓய்வு ஊதியத்தை வீட்டுச் செலவிற்குக் கொடுத்து விட வேண்டியது. இவர் ஓய்வு பெறும் போது கிடைத்த தொகையை வங்கியில் போட்டு வைத்திருந்தார். பிறகென்ன? ஒன்பது மணிக்குள் சாப்பிட்டு, கையில் சாப்பாட்டுத் தூக்குடன் அரக்கபரக்கக் கிளம்பிய வேதனை இனி இல்லை.

நிதானமாய்ப் பசியெடுக்கும் போது சாப்பிட்டு மதியவெயிலில் அலுப்பு தீரக் குளித்து ஈஸிசேர் போட்டுத் தெரு விவகாரங்களைக் கவனிக்கலாம். சாயங்காலமாய் வாக்கிங் கிளம்பினால் கடற்கரைக் காற்றின் சுகத்தை அனுபவித்து விட்டு மனம் நிறைந்து வீடு திரும்பி, சாப்பிட்டு, சுகமாய்த் தூங்கலாம்.

ஆனால் வாசுவின் மனைவி ஏன் இப்படிக் கூச்சல் போடுகிறாளென்று தெரியவில்லை.

'நான் எப்போது சாப்பிட்டால் இவளுக்கென்ன?'

அது புரியவில்லை அவருக்கு. இவராய்ப் பார்த்துத் தேர்ந்தெடுத்துத் தன் ஒரே மகனுக்கு மனைவியானவள்தான்.

திருமணமாகி எட்டு வருடங்கள். இரண்டு பேரப்பிள்ளைகள் இருக்கிறார்கள். ஆனால் நடராஜன் தன் மருமகளுடன் அதிகம் பேசியதில்லை.

நடராஜன் யோசித்துக் கொண்டிருந்த போதே பேரப்பிள்ளைகள் ஸ்கூலுக்குக் கிளம்ப வெளியே வந்தன. வாசலுக்குக் குறுக்கே சேர்போட்டு உட்கார்ந்திருக்கும் தாத்தாவை ஏறிட்டன.

''இப்படி நீ குறுக்கே சேர் போட்டுக்கிட்டு உட்கார்ந்தா நாங்க எப்படி வெளியே போறதாம்?''

''போய் டிபன் பண்ணு தாத்தா. அம்மா திட்றா பாரு.''

நடராஜன் எழுந்து சேரை நகர்த்தினார். பேரப்பிள்ளைகள் அவரைக் கடந்து வெளியே சென்றன.

இவைகளும் தாயைக்கண்டு துளிர்த்துப் போய் விட்டன. தாயைப் போலத் தானே பிள்ளை!



மீண்டும் சேரை அதே இடத்தில் போட்டுக் கொண்டார். உரக்கப்பாட ஆரம்பித்தார்.

**சா**யங்காலம் ஆபிஸ் முடிந்து வாசு வந்தான். நடராஜன் ஹாலில் இருந்தார். வாசு வந்ததுமே புகாரை ஆரம்பித்தார்.

''எனக்குத்தான் ரிடையர்மெண்டு கிடைச்சிட்டுதே. இதுக்குமேலே நிம்மதியா யிருக்கலாம்னு பார்த்தேன். இத்தனை நாள் கஷ்டப்பட்டு ஓடாத்தேஞ்சதுக்கு இப்பத் தான் விடிவுகாலம்னு நெனைச்சேன். ஆனா உம்பொண்டாட்டிக்கு அது பொறுக்கலை போலிருக்கு. நான் எப்படா இட்லி கல்லு மாதிரியிருக்குன்னு உன்கிட்ட கோள் சொன்னேன்? இட்லின்னா பூமாதிரி இருக்கணும்னு சொன்னேன். அது தப்பா? நீ அப்படி நகர்ந்தியோ இல்லையோ, புலம்ப ஆரம்பிச்சிட்டா. பசியெடுக்கலை அப்புறமா சாப்பிட்டுக்கலாம்னு பார்த்தா உம்பொண்டாட்டிக்கு அது பிடிக்கலை. இவளைப் பார்த்து உம்புள்ளைங்களும் என்னை எதிர்த்துப் பேசறாங்க. முளைச்சு மூணு இலை விடலை. அதுங்க பேச்சைக் கேட்க வேண்டியதாயிருக்கு. இதுக்கு ஆபிஸ், உத்தியோகம்னு பழைய மாதிரியே இருந்திருக்கலாம் போலிருக்கு. சாகறவரைக்கும் நான் இவங்க பேச்சைக் கேட்டுக்கிட்டு வாயை மூடிட்டு இருக்கணும். இது ஒரு அவஸ்தை.''

வாசு எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டான். நடராஜனுக்குத் தெரியும். இனி அவன் வாயைத்திறக்க மாட்டான். அவர் நினைத்தபடியே நடந்தது.

அதற்குப் பிறகு இதேபோல இரண்டு மூன்று சம்பவங்கள். பிறகு அவரை யாருமே எதுவுமே கேட்டுக் கொள்ளவில்லை. குழந்தைகள் தானுண்டு தன் வேலையுண்டு என்றிருந்தனர். ராஜேஸ்வரி வாயே திறக்கவில்லை.



# ஓய்வு

இனி யார் பிரச்னையும் இல்லை. யாரும் தன்னை எதுவும் கேட்க மாட் டார்கள். நினைத்த பொழுது சாப்பிடலாம், இஷ்டப்பட்ட போது தூங்கலாம். சுகமாய் ஈஸிசேர் உறக்கமும் கடற்கரை வாக்கிங்கு மாய்.... நடராஜன் இதுதான் ஓய்வு என்று நினைத்துக் கொண்டார்.

ஒரு நாள் நடராஜன் தன் புத்தக பீரோ வில் திருவருட்பா தேடிக் கொண்டிருந்தார். ஒவ்வொரு புத்தகமாய் எடுத்துத் தேடிக் கொண்டிருந்த சமயத்தில் திடீரென்று நெஞ்சுவலிக்கிறாற் போலத் தோன்றியது. இதயம் படபடவென்று அடித்துக் கொண் டது. வலது கையால் நெஞ்சைப் பிடித்துக் கொண்டார். தண்ணீர் குடிக்க வேண்டும். குடித்தால் சரியாகிவிடும். கையிலிருந்த புத்தகத்தை பீரோவில் வைக்க முனைந்தார்.



“என்னங்க! பேப்பர் செய்திகளை அப்புறம் படிக்கலாம்... முதல்ல நம்ப காலனியில் இருக்கும் எல்லா வீட்டுச் செய்திகளையும் விரிவாச் சொல்றேன், கேளுங்க...!”

படபடப்பில் கை நடுங்கியது. புத்தகங் களில் கை அழுத்தி புத்தகங்கள் மளமள வெனச் சரிந்து கீழே விழுந்தன. அங்கொன் றும் இங்கொன்றுமாய்ப் பக்கங்கள் விரிந்து புறமுதுகிட்டுக் கிடந்தன.

அந்தக் குழப்பமும் கலவரமும் அவரை மேலும் அதிர்ச்சிக்குள்ளாக்கின. உடல் கிடு கிடுவென நடுங்க ஆரம்பித்தது. நெஞ்சுவலி மேலும் அதிகமானது. இரண்டடி எடுத்து வைப்பதற்குள் கீழே விழுந்தார். வாய் திறந்து தன் மருமகளைக் கூப்பிட நினைத் தார். பேச்சு வரவில்லை. தொண்டைக்குள் ஏதோ பாறாங்கல் அடைத்துக் கொண்டு குரலே வெளியே வர முடியாதபடி தடுப்பது போலப்பட்டது அவருக்கு.

நடராஜனுக்கு மீண்டும் நினைவு வந்த போது அதே அறையில் படுத்திருந்தார். கீழே விழுந்த புத்தகங்கள் வரிசையாய் அறையின் ஒரு மூலையில் அடுக்கப்பட் டிருந்தன. அறையின் வாசலில் நின்று கொண்டு அவரின் பேரன்கள் அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். இவர் கண் விழித்தது கண்டு சமையலறை நோக்கி ஓடினார்கள்.

''அம்மா தாத்தா முழிச்சிட்டாரு......''

குழந்தைகளின் கூச்சல் கேட்டு ராஜேஸ்வரி சந்தோஷமடைந்தாள். சமை யல் காரியத்தை அப்படியே போட்டுவிட்டு ஓடினாள்..

''மாமா, இப்ப எப்படி இருக்கு?''

நடராஜன் பரவாயில்லை என்பதாய்த் தலையசைத்தார்.

பேரன்கள் இருவரும் அவரருகில் தலை யணைக் கருகாய் உட்கார்ந்து கொண் டார்கள்.

''தாத்தா, இப்ப எப்படி இருக்கு?''

தாய் கேட்டதையே பெரியமனுஷ தோரணையாய்த் திருப்பிக் கேட்டார்கள்.

நடராஜனின் உடம்பு முழுவதும் வலி இருந்தது.

''டாக்டர் வந்து செக்பண்ணிப் பார்த் தார். ஒண்ணும் கவலைப்பட வேண்டிய தில்லைன்னு சொன்னார். இந்த மாத்திரை மருந்தையெல்லாம் ஒழுங்கா சாப்பிடச் சொல்லியிருக்கார்''

அவரை ஆறுதலாய்ப் பார்த்துவிட்டு உள்ளே போனாள்.

தூங்கும் வரை குழந்தைகளும் வாசுவும் அருகிலேயே இருந்தார்கள். ராஜேஸ்வரி ரசஞ்சாதங்குழைத்துக் கொடுத்தாள். டாக்ட ரின் குறிப்புச் சீட்டைப் பார்த்து கசப்பு திரவத்தையும் வண்ணவில்லைகளையும் அளவாய்க் கொடுத்தாள். தினமும் இதே போல கவனித்துக் கொண்டாள்.

நடராஜன் பழையபடி நன்கு நடமாட பத்து நாட்களாயிற்று. அந்தப் பத்து நாட் களும் பலப்பல யோசனைகள் வந்தன. அயர்ச்சியாய் இருந்தது. அயர்ச்சிக்கு என்ன காரணம் என்று யோசித்த போது மன வேதனை என்று புரிந்தது. தன்னுடைய எண் ணங்களும் சிந்தனைகளும் தவறு என்று உணர்ந்ததுதான் மனவேதனைக்குக் கார ணம்.

உறவுகளைத் தவிர்த்து யார் தொந் தரவுமின்றி நிம்மதியாய்ப் பொழுதைக் கழிக்கலாமென்று நினைத்தது தவறு. முழு ஓய்வாய் இருக்கலாம்; யாருடைய உதவி யும் தேவையில்லை என்று நினைத்தது தவறு.

''மாமா கடக்கட சாப்பிடுங்க'' - என்ற மருமகளின் வார்த்தையின் சுகம் இப் போது புரிந்தது. அது தன் மீதுள்ள கரிசனம். பத்து நாட்கள் முகம் சுளிப்பின்றி வேளைக்கு வேளை மாத்திரைகளும் மருந்துமாய்த் தன்னைக் கவனித்துக் கொள்

கிறாளெனில் அது கடமைக்குச் செய்த செயலல்ல.

இது புரியாமல் போயிற்று. அதற்குக் காரணம் திமிர். நான் தரும் பென்ஷனுக்குத் தானே நீ சோறு போடுகிறாய் என்ற திமிர். உறவில் பண்டமாற்று செய்ய முடியாது. 'அரிசி தரேன் அன்பு தா' என நடந்து கொள்ள முடியாது. அதற்கு வீடும் புத்தக அலமாரியும் மருமகள் வைத்த வத்தக் குழம்பும் தேவையில்லை. உடுப்பி ஹோட்டல் அளவுச் சாப்பாடு போதும். ஈஸிசேரும் புத்தகமுமாய்ச் சாய்ந்து கொள்ள வாடகைக்கு ஒரு அறை போதும்.

பழைய மாதிரியே நடமாட ஆரம்பித்ததும் நடராஜன் சமையலறைக்குள் நுழைந்து ராஜேஸ்வரியிடம் பேசியபோது அவளே ஆச்சரியப்பட்டாள்.

''வேண்டாம் மாமா. நானே காய் வாங்கிட்டு வந்துடறேன். உங்களுக்கு ஏன் சிரமம்?'' என்றாள்.

''இதிலென்னம்மா சிரமம்.''

வற்புறுத்தி அவளிடமிருந்து பையை வாங்கிக் கொண்டார்.

வீட்டிற்கு வந்து காய்கறிப்பையைக் கொட்டியதும் ராஜேஸ்வரி வாய்பிளந்தது கண்டு சந்தோஷமாயிருந்தது.

''பிரமாதம் மாமா... இந்தப் பிஞ்சுக் கத்திரிக்காயை முழுசா வதக்கி, குருமா செய்தா என்ன ருசியாயிருக்கும் தெரியுமா?''

இந்தப் பாராட்டுதான் சந்தோஷத்தைக் கொடுக்கும். சின்னச்சின்ன விஷயத்திற்கெல்லாம் தன் குடும்பம் தன்னைப் புகழ்வது கண்டு ஆனந்தம் உண்டாகும். அந்த ஆனந்தத்தை நடராஜனால் உணரமுடிந்தது.

ஒரே மாதத்தில் நடராஜனுடன் வீடு இணங்கிப் போனது. பேரப்பிள்ளைகள் தாத்தா தாத்தா என்று கட்டிக் கொண்டன. ராஜேஸ்வரியும் அவருடன் சகஜமாகிப் போனாள்.

''நான் மட்டும் வாக்கிங் போகணுமா? குழந்தைகளையும் கூட்டிப் போகலாம் நீயும் வாயேன்'' என்று கூற, குழந்தைகள் ''தாத்தா பீச்சுக்குத் தானே?'' என்று குதிக்க, ராஜேஸ்வரி மறுக்க மறுக்க வலுக்கட்டாயமாய் அழைத்துக் கொண்டு போனார். குழந்தைகள் அலைகளின் ஆர்ப்பாட்டம் கண்டு குதித்தன. மாமனாரும் மருமகளும் நிறையப் பேசினார்கள். நடராஜன் தான் கடற்கரைக்கு வரும்போது வழக்கமாய் உட்காரும் இடத்தைக் காண்பித்தார். சிறு வயதில் கடற்கரையில் கும்மாளம் அடித்த கதையைச் சொன்னார்.

குழந்தைகள் சுண்டல் வாங்கித் தின்றன. வீராப்பாய்க் கை வீசி நடந்தன. மணலில் அலைந்தன. இருள் மண்டும் வரை கடற்கரையில் சுற்றிவிட்டு வீடு வந்து சேர்ந்தபோது வாசு ஏதோ எழுதிக் கொண்டிருந்தான்.

''நீங்க பாவம். என்ன ஜாலியா இருந்துச்சி தெரியுமா?''

- கடற்கரைக்கு வராத தந்தையைக் குழந்தைகள் கிளற ஆரம்பித்தன.

ராஜேஸ்வரி அவசர அவசரமாய்ச் சமைக்கப் போய்விட்டாள். நடராஜன் ஈஸிசேர் எடுத்து வந்து வாசலுக்குக் குறுக்காயில்லாமல் ஒரு ஓரமாய்ப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தார்.

ஈரமாய்க்காற்று வந்து உடலைத் தழுவியது.

நடராஜனுக்கு இம்முறை ஆனந்தமாய்ப் பாட்டு வந்தது.



''இன்றைய போரில் நாம் எப்படி ஜெயித்தோம்?''
''நீங்கள் போர்க்களம் வராததால், புறமுதுகு காட்டி ஓடிவரும் தைரியம் யாருக்கும் வரவில்லை மன்னா!''
- மணியன் தர்மலிங்கம்

''நான் புரிவன எலாம் தான்
புரிந்து எனக்கே
வான்பதம் அளிக்க வாய்த்த நல்நட்பே
உள்ளமும் உணர்ச்சியும் உயிரும்
கலந்து கொண்டு
என்னுறுநெய்யில் என்
உள்ளுறும் நட்பே
செற்றமும் தீமையும் தீர்த்து
நான் செய்த
குற்றமும் குணமாக் கொண்ட
என் நட்பே....''

நெஞ்சுருகப்பாடும் போது தனக்காகவே இந்தப்பாட்டு என்று தோன்றியது.

இதுதான் ஓய்வு. இத்தனை ஆனந்தம், இத்தனை குதூகலம் சேர, உடலால் உறவுகளுக்காக உழைத்து, மனத்திற்குத் தரும் ஓய்வு.

கடற்கரை மணலில் கால் புதைய அலைந்து உடல் களைத்துப் போயிருந்தாலும் தன் மனம் மட்டும் வெறுமையாய், ஓய்வாய் இருப்பதை நடராஜனால் உணர முடிந்தது.



# வியர்க்குரு உள்ளோருக்கு மாம்பழம் விரோதி!

**கோடையில் கூல்ட்ரிங்க் விளம்பரங்களுடன் போட்டி போடுபவை ப்ரிக்லிஹீட் பவுடர் விளம்பரங்கள்! இந்தப் பவுடரை அதிகம் உபயோகிப்பது நல்லதா...? டாக்டர் செந்தமிழ்ச் செல்வியிடம் கேட்டோம் :**



"ப்ரிக்லி ஹீட் பவுடரின் மருந்துத் தன்மை பக்க விளைவுகளற்றது. தொடர்ந்து உபயோகிப்பதால் ஒரு கெடுதலும் இல்லை. சில வகை ப்ரிக்லி ஹீட் பவுடர் டப்பாக்களின் மேலேயே 'குழந்தைகளுக்கு ஏற்றதல்ல' என்று குறிப்பிட்டிருப்பார்கள். கவனமாக உபயோகிக்க வேண்டும். இந்தப் பவுடரிலுள்ள சில மருந்துப் பொருட்கள் கிருமிகளை அண்ட விடாமல் காக்கின்றன. வியர்வையை உறிஞ்சிக் கொண்டு சருமத்தை உலர்வாக வைக்க உதவுகின்றன. இதனால் வியர்க்குருவிலிருந்து தற்காலிக நிவாரணம் கிடைக்கிறது."

"நிரந்தரமான நிவாரணம் கிடையாதா?"

"சிலருக்கு இது பரம்பரை 'நோயாக'க் கூட அமையும். இன்னும் சிலருக்குப் பிறவியிலேயே மிக அதிகமான வியர்வை சுரப்பிகள் அமைந்து விடுகின்றன. இத்தகையவர்களுக்கு நிரந்தர நிவாரணம் கிடைப்பது கடினம். ஆனால், வேறு சிலர் இறுக்கமான, தடிமனான, நீர் உறிஞ்சாத ஆடைகளைக் கடும் கோடையிலும் அணிவதன் மூலம் வியர்க்குருவை வரவேற்கிறார்கள். இப்பழக்கத்தை விட்டால் வியர்க்குரு வருவது குறையும் அல்லது நின்றே விடலாம்.

"நம் நாட்டின் சீதோஷ்ணத்துக்குப் பருத்தி ஆடைகளே சிறந்தவை. உள்ளாடைகளின் இறுக்கமான எலாஸ்டிக் பொருந்தும் இடங்களில் வியர்வை உறிஞ்சப்படாமல் அதிகம் தங்குகிறது. காற்றோட்டமே பெறாத இந்தப் பகுதிகள் சீக்கிரம் பாதிக்கப்படுகின்றன. செயற்கை இழை கலப்பில்லாத, எலாஸ்டிக் பொருந்தாத பருத்தி உள்ளாடைகளே சிறந்தவை. ஆண்கள் கை வைத்த பனியன்களை அணிவதே நல்லது.

"தினம் இரண்டு தடவை குளிக்கலாம். ஆனால் 'தண்ணீருக்கு எங்கே போக?' என்று கேட்பீர்கள். ஒருவேளை குளித்து, மாலையில் ஒன்றிரண்டு செம்பு தண்ணீரில் வியர்வை தங்குமிடங்களை மட்டும் சோப்புப் போட்டுக் கவனமாகச் சுத்தம் செய்து பவுடர் இடலாம். இதைச் செய்யாத போது வியர்வையில் வெளியேறும் உப்புக்கள் வியர்வைச் சுரப்பிகளை அடைத்துக் கொள்ளும். இவை பாக்டீரியா கிருமிகளை ஈர்க்கும். வியர்க்குரு தோன்றும். முற்றிய நிலையில் சருமத்தில் கட்டிகள் தோன்றிச் சீழ் பிடித்துக் கொள்ளும். அப்போது மருத்துவரைக் கலந்தாலோசிப்பது நல்லது..."



என விளக்கும் டாக்டர் தமிழ்ச் செல்வி, "வியர்க்குரு பிரச்னை உள்ளவர்களுக்கு மாம்பழம் பரம எதிரி" என்றும் கூறுகிறார். இரண்டுமே ஒரே சீசனில் தான் வருகின்றன... என்ன செய்ய!

– கீதா மோஹன்

# துள்ள வேண்டிய பள்ளிப் பருவத்தைத் துவள விடலாமா?

டாக்டர் சிவசுப்பிரமணிய ஜெயசேகர்

**ப**ள்ளிக்கூடத்தில் புதிதாகச் சேர்த்த மகனை வகுப்பறைக்கு அழைத்து வந்தார் தந்தை. வகுப்பாசிரியர் வரும் வரை காத்திருந்து, வந்த பிறகு, தமது மகனுக்குக் காது சற்று மந்தம் எனக் கூறினார் - இது என்னுடைய பள்ளி நாள் அனுபவம்!

மகனின் உடற்குறையை மற்ற மாணவர்களுக்கு மத்தியில் கூறிய அப் பையனுடைய தந்தையின் செயல் அப்போது எங்களுக்கு வியப்பாக இருந்தது. ஆயினும் ஆசிரியர் அந்த மாணவனுக்கு முதல் வரிசையில் இடமளித்து, அவனிடம் கேள்விகள் கேட்கும் போதெல்லாம் தனிக்கவனம் செலுத்தியதும் நினைவிலிருக்கிறது.

இதே போல எல்லா மாணவர்களையும் கூர்ந்து கவனிப்பது ஆசிரியர்களுக்குச் சாத்தியமில்லை என்பது ஒருபுறமிருக்க, பெற்றோர்களும் தங்கள் குழந்தைகளிடம் உள்ள நுண்ணிய குறைகளைக் கூர்ந்து கவனிப்பதில்லை. விளைவு : நல்ல அறிவுக் கூர்மையுள்ள மாணவனிடம் கூட திறமைக் குறைவு ஏற்படுகிறது. இதன் உடன் விளைவாகக் கூச்சம், தாழ்வு மனப்பான்மை உண்டாக, மலர வேண்டிய அரும்பு கருகி வாடுகிறது.

## பார்வைக் கோளாறுகள் :

அறிவுக்கூர்மை மிக்க மணவர்களில் பலர் திடீரென பாடத்தில் கவனம் செலுத்த இயலாமல் தவிப்பதை ஆசிரியர் பணியில் இருப்போர் கவனித்திருக்கலாம். பார்வைக் கோளாறுகளே இதற்கு முக்கிய காரணம். இதனை ஆரம்ப கட்டத்திலேயே பெற்றோர்களும், ஆசிரியர்களும் அறிய முடிவதில்லை. பொதுவாக நாம் நினைப்பது போல் பார்வைக் கோளாறுகள் கிட்டப் பார்வை, தூரப் பார்வை என்பன மட்டும் அல்ல... மேலோட்டமான முதற்கட்ட பரிசோதனைகளின் போது கவனிக்காமல் விடக் கூடிய கோளாறுகளும் உள்ளன. இத் தவறுகளை உங்கள் மருத்துவர்கள் கூட செய்யக்கூடும்.

உதாரணமாக ஒரு சம்பவம் : தலைவலி காரணமாகப் படிப்பில் கவனம் செலுத்த இயலாமல் போன ஒரு மாணவனை அவனது பெற்றோர் மருத்துவரிடம் அழைத்துச் சென்ற போது, பரிசோதனைக்குப் பின்னர் அம் மாணவனுக்குக் கிட்டப் பார்வைக்கான கண்ணாடி அணிவிக்கப் பரிந்துரைக்கப்பட்டது. எனினும் அம் மாணவனின் பிரச்னைகள் தீர்ந்தபாடில்லை. பெற்றோர்களிடமும், ஆசிரியர்களிடமும் ஏச்சுக்கள் வாங்கிய பின்னர் மீண்டும் ஒரு கண் மருத்துவரிடம் அழைத்துச் சென்ற போது, அவர் அம் மாணவனின் பிரச்னை கிட்டப் பார்வை மட்டுமல்ல, வலு குறைந்த கண் தசைகளின் காரணமாக கண்கள் இரண்டும் ஒருமுகமாகக் குவிய மறுத்ததே (convergence insufficiency) எனக் கண்டுபிடித்தார்!

உறவு முறைக்குள் திருமணம், சத்துணவுக் குறைவு, கண் பார்வைக்கு அவசியமான வைட்டமின் 'ஏ' குறைவு போன்ற பல குறைகளைக் கொண்ட இந்தியப் பள்ளி மாணவர்களின் நிலைமை பரிதாபமானது. மாணவர்களின் பார்வைக் கோளாறுகள் பெரும்பாலும் அவர்கள் உயர் வகுப்பினை எட்டும் வரை தெரிவதில்லை. காரணம், ஆரம்பப் பள்ளிகளில் மாணவர்களுக்குக் கொடுக்கப்படும் புத்தகங்களில் பெரிய அச்சு எழுத்துக்களே உள்ளன. ஆரம்ப நிலை வகுப்புகளில் உயர்நிலை வகுப்பு அளவிற்குப் படிக்கவும் வேண்டியிருப்பதில்லை.

மேல் வகுப்புக்களை அடையும் போது தான் மாணவர்கள் வகுப்பறையில் கரும்பலகையில் எழுதப்படும் எழுத்துக்களைப் பார்க்க இயலாது தவிப்பார்கள்! சிலர் புத்தகத்தைப் படித்த கையோடு நிமிர்ந்து கரும்பலகையில் எழுதப்படும் எழுத்துக்களைப் பார்க்க இயலாது சிரமப்படுவர். கிட்டப் பார்வைக்கும் தூரப் பார்வைக்குமான உடனடி ஒத்துழைப்பை கண் தசைகள் செய்ய இயலாமையே இதற்குக் காரண

மாகும். மேலும் சிலர் புத்தகங்களின் வரிகளின் மீது தங்களின் விரல்களை வைத்து இழுத்துப் படிப்பதைப் பார்க்கலாம். சிலர் ஒரு கண்ணைக் கைகளால் மறைத்துக் கொண்டு மற்றொரு கண்ணால் பார்த்துப் படிப்பர். முன்னர் படிப்பதில் ஆர்வம் கொண்டிருந்தவர்கள் திடீரெனப் படிக்கும் பழக்கத்தினை நிறுத்தி விடுவதைக் கவனிக்கலாம். இவ் வகை அறிகுறிகளைக் குழந்தைகளிடம் பெற்றோர்களும், மாணவர்களிடம் ஆசிரியர்களும் கண்டால், உடன் கவனித்தல் வேண்டும். அம் மாணவர்களை உடனே கண் மருத்துவரிடம் அழைத்துச் செல்லுதல் அவசியமாகும்.

## காது கேட்கிறதா?

சந்தடி நிறைந்த நகர்ப் புறத்தில் தொடர்ந்து அளவற்ற ஓசைகளின் தாக்குதலினால் (Noise pollution) காது கேட்கும் திறனில் குறைவு ஏற்படுகிறது. நான்கு டிராக்குகளுடன் அதிரும் சினிமா திரை அரங்குகளும், வீடியோ விளையாட்டுக்களும், ஸ்டீரியோ இசை மோகமும், காதில் பொருத்தும் ஒலிப்பான்களும் (Head phone) குழந்தைகளின் காது கேட்கும் திறனைப் பெரிதும் பாதிக்கின்றன.

கிராமப்புற மாணவர்களுக்குக் கேட்கும் திறனில் குறைவு ஏற்படுவதற்குக் காதில் ஏற்படும் நோய்த் தொற்றுக்களே பிரதான காரணமாகின்றன. நல்ல கேட்கும் திறனுக்குச் சுகாதாரமான செவிப்பறை (eardrum), நடுச் செவி, உட்செவி, எட்டாவது கபால நரம்பு (8th Cranial nerve) போன்றவை அவசியமாகும். இவற்றில் ஏதேனும் ஒன்றில் சீர்கேடு ஏற்பட்டாலும் கேட்கும் திறனில் பாதிப்பு ஏற்படுகிறது. குழந்தைப் பருவத்தில் எளிதில் தாக்கும் உயர் சுவாச மண்டல உறுப்புக்களின் நோய்த் தொற்று (upper respiratory tract infection) கவனிக்காது விடப்படும் பொழுது, அது யுஸ்டேசியன் குழாய் வழியாக (மூக்கினையும், நடுக் காதினையும் இணைப்பது) நடுக் காதிற்குப் பரவ ஏதுவாகிறது. தொற்று நடுக்காதினை அடைந்த பிறகு சீழ் ஏற்பட்டு அது செவிப் பறையினில் துவாரத்தை உண்டாக்கி வெளியேறுகிறது. செவிப்பறையில் துவாரம் ஏற்படுவதால் நடுக்காதிற்கும், வெளிக் காதிற்கும் நிரந்தரமான தொடர்பு ஏற்பட்டு வெளிக்காது வழியாக எளிதில் மீண்டும் மீண்டும் நடுக்காதில நோய்த் தொற்று உண்டாக ஏதுவாகிறது. மேலும் செவிப்பறையில் துவாரம் ஏற்படுவதால் செவியின் கேட்கும் திறனில் ஒரு குறிப்பிட்ட அளவினைக் குழந்தைகள் இழக்க நேரிடுகிறது.



இவை தவிர, குழந்தைகளுக்குக் காதில் பல்வேறு காரணங்களால் வலி ஏற்படும் போது, சூடான எண்ணெய் மற்றும் திரவங்களைக் காதில் ஊற்றும் தவறான பழக்கங்கள் இன்னமும் கிராமப் பகுதிகளில் கடைப்பிடிக்கப் படுகின்றன. இதுபோன்ற தவறுகளால் கேட்கும் திறனை இழக்கும் குழந்தைகள் ஏராளம். மேலும் குழந்தைப் பருவத்திற்கே உரித்தான குறும்புத்தனங்கள் காரணமாக, குச்சி, பென்சில் போன்ற கூர்மையான பொருட்களைக் காதில் நுழைத்துக் காதினைப் பழுதாக்கிக் கொள்ளும் குழந்தைகளும் உண்டு.

குழந்தைகளின் காதில் நுழைந்த அந்நியப்

ஆந்திர மாநில அமைச்சர் சங்கீத வெங்கட ரெட்டி, தமக்கும் தமது காவலர்களுக்கும் ரயிலில் நாலு படுக்கைகள் கொண்ட கேபின் ஒதுக்கப்படவில்லை எனக் கோதாவரி எக்ஸ்பிரஸை 90 நிமிடங்கள் நிறுத்தி வைத்தார். இதனால் அந்த எக்ஸ்பிரஸில் பயணம் செய்த பல பயணிகள் பாதிக்கப்பட்டனர். ஆனால் மந்திரி அதைப் பற்றிக் கவலைப்படவில்லை! இதைப் படித்ததும், ஜப்பானில் நடந்த ஒரு சம்பவம் நினைவுக்கு வருகிறது. டோக்கியோ - ஒசாகா ரயில் பாதையில் ஒரு ரயில்; ஒரு முக்கிய புள்ளியின் வருகைக்காக 67 செகண்டுகள் ஒரு ஸ்டேஷனில் கூடுதலாக நிறுத்தி வைக்கப்பட்டது! இங்கேயெனில் அதை யாருமே கண்டுகொண்டிருக்க மாட்டார்கள். ஆனால் ஜப்பானில் இதனால் பெரும் பூகம்பமே கிளம்பியது. 167 இதழ்கள் இந்தச் செயலைக் கண்டித்துத் தலையங்கம் எழுதின... பலன்... ரயில்கள் இனி முக்கிய புள்ளிகளுக்காக நிறுத்தி வைக்கப்பட மாட்டாது என அன்றே முடிவெடுத்தனர். இந்த நிலை இந்தியாவில் வரவா போகிறது!



- ஆதாரம் : தினமணி
- ராஜிராதா

பொருட்களை வெளியே எடுப்பதிலும் மிக்க கவனம் செலுத்த வேண்டும். இம்முயற்சியின் போது ஏற்படும் காயங்கள் கேட்கும் திறனையே பாதித்து விட வாய்ப்பு உள்ளது.

குழந்தைகளுக்குக் காது கேட்கும் திறனில் குறைவு ஏற்பட்டுள்ளதை குழந்தைகளைக் கூர்ந்து கவனிக்கும் பெற்றோர் அல்லது ஆசிரியர்கள் உடனே அறிய இயலும். அறிகுறி ஏதேனும் தென்பட்டால் குழந்தைகளை உடன் குழந்தை மருத்துவரிடமோ, அல்லது காது, மூக்கு, தொண்டை மருத்துவரிடமோ அழைத்துச் செல்வது அவசியமாகும்.

## சத்துணவுப் பற்றாக்குறை :

குழந்தைகள் பள்ளிக்குத் தூக்கிச் செல்லும் புத்தக மூட்டையின் அளவு ஒரு புறம் அதிகரிக்க, அவர்கள் எடுத்துச் செல்லும் மதிய உணவின் அளவு குறைந்து கொண்டே போவதைப் பல பெற்றோர்கள் கவனித்திருக்கலாம். இவர்களுக்கு ஏற்ற வகையில் மிகச் சிறிய புத்தகங்கள் வடிவில் கூட டிபன் பாக்ஸ்கள் கிடைக்கின்றன! இவ்வகை உணவுப் பெட்டிகளைப் பார்க்கும் போதுதான் வளரும் குழந்தைகள் எவ்வளவு குறைவாக உண்ணுகிறார்கள் என்பது நமக்குப் புலப்படும்!

காலையில் அவசரம் அவசரமாகக் கொஞ்சம் அள்ளிப் போட்டுக் கொண்டு புறப்படுகிறவர்கள் மதியமும் நன்கு சாப்பிடவில்லை எனில் எப்படி? வளரும் பருவத்திலுள்ளவர்களுக்குச் சர்க்கரைச் சத்தும் (carbohydrates) புரதச் சத்தும் ஏராளமாகத் தேவைப்படுகிறது. இவை குறைந்தால் குழந்தைகள் சோர்வடைவதுடன் திறமைக் குறைவும் ஏற்படும். நிபுணர்கள் குழந்தைகள் உணவில், புரதச் சத்துமிக்க உணவுப் பொருட்களையும், கீரை, பழங்களையும் கட்டாயம் சேர்க்க வேண்டும் என அறிவுறுத்துகின்றனர். ஆனால் பெரும்பாலான பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளைச் சரியான நேரத்திற்குப் பள்ளிக்கு அனுப்ப வேண்டும் என எண்ணுகிறார்களே தவிர அவர்களின் காலையுணவு, மதிய உணவு போன்றவற்றின் அளவு, தரம் பற்றிக் கவலைப்படுவதில்லை.

## களைப்பு :

குழந்தைகள் எப்பொழுதுமே சுறுசுறுப்புடன் காணப்படுபவர்கள். பகல் வேளைகளில் எவ்வாறு தங்கள் வேலைகளிலும், விளையாட்டுக்களிலும் ஈடுபடுகிறார்களோ அதே தீவிரத்துடன் அவர்கள் அடித்துப் போட்டது போல் தூங்கவும் செய்வார்கள். குழந்தைகளின் ஆரோக்கியமான உடல்நலத்திற்கு நல்ல தூக்கம் மிக மிக அவசியமாகும். ஆயினும் இன்றைய வாழ்க்கைச் சூழலில், இரவில் வீடியோ, தொலைக்காட்சி, ஸ்டார் மூவி, போன்றவற்றைப் பார்த்துத் தூக்கத்தைக் கெடுத்துக் கொள்கிறார்கள். இதனால் குழந்தைகளின் கல்வி கற்கும் திறன் பாதிப்படைகிறது. பள்ளி நேரத்தில் தூக்கம் கண்களைச் சுழட்ட

# அரைமணி நேரம் செலவிடத் தயாரா?




## ஆம்... உங்களது முன்னேற்றத்திற்காக, தினசரி அரைமணி நேரம் செலவிடத் தயாராக இருக்கிறீர்களா? அப்படியானால் மேற்கொண்டு படியுங்கள்!...

★ **வாழ்க்கையில்** முன்னேற வேண்டும் என்ற விருப்பம் உடையவரா நீங்கள்?

★ ஆங்கில மொழியில் போதிய புலமையின்மை உங்களது முன்னேற்றத் திற்கு ஒரு தடையாக இருக்கிறதா?

★ பல வழிகளில் முயன்றும், பல புத்தகங்களைப் படித்தும் ஆங்கிலத்தில் சரளமாகப் பேசும் ஆற்றல் பெற முடிய வில்லையே என்று வருத்தப்படுகிறீர் களா?

★ கவலையை விடுங்கள்... நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற்றத்தை அடைய உங்களது ஓய்வு நேரத்தில் தினசரி அரைமணி நேரம் ஒதுக்கினால் போதும்!

ஆம் - இந்த அரைமணி நேரத்தில் நீங்கள் தினசரி மேற்கொள்ள வேண்டிய பயிற்சியினை மிகவும் எளிய முறையில் சொல்லித் தந்து, நீங்கள் தயக்கமின்றி ஆங்கிலத்தில் உரையாட தபால் மூலம் மிகச் சிறந்த முறையில் பயிற்சி அளிக் கிறோம்.

எனவே, ஆங்கிலத்தில் சரளமாகப் பேச வேண்டும், இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், என்ற உங்களது நீண்ட நாளைய விருப்பம் இப்பயிற்சியின் மூலம் நிச்சயம் நிறைவேறும்.

என்ன? பயிற்சிக்காக தினசரி அரை மணி நேரம் செலவிடத் தீர்மானித்து விட்டீர்களா?

அப்படியானால், உங்களது முன் னேற்றத்தின் முதல் முயற்சியாக ஒரு ஐந்து நிமிடம் செலவு செய்து ஒரு போஸ்ட் கார்டில் "நான் ஆங்கிலம் கற்க விரும்புகிறேன்" என்று எழுதி,

---

**விவேகானந்தா கல்வி நிலையம்,**
**9, நடேசன் தெரு, தி.நகர்,**
**சென்னை 600 017.**

---

என்ற முகவரிக்கு இன்றே அனுப்புங் கள் பயிற்சி பற்றிய விவரங்களை உங்களுக்கு உடனே அனுப்பி வைக் கிறோம்.

**"நேர்முகப் பயிற்சியும் உண்டு"**

NAGA

## செம்பருத்தி

இடைவேளைக்கு முன் :

கோபக்காரர அம்மாள் புவனேஸ்வரி தம் புருஷனுக்குச் செய்து கொடுத்த சத்தியப் படி, லண்டனிலிருந்து வரும் பேரன் ராஜாவை வீட்டில் சேர்க்க மறுக்கிறார்.

ராஜா பங்களா வாசலிலேயே சத்தியாக் கிரஹம் செய்து, மழையில் நனைய, பாட்டி மனம் கரைய - பேரனுக்கு உள்ளே அனு மதி.

ராஜா, தான் செம்பருத்தியை (பாட்டி யுடன் வீட்டிலேயே வளரும் குப்பத்துப் பெண்) விரும்புவதாகச் சொல்ல, பேத்தி யாய் வளர்த்த செம்பருத்தியை, புவனேஸ் வரி அம்மாள் ரோடில் தூக்கிப் போடுகிறார்! செம்பருத்தியின் அண்ணன் மாடசாமி பக்கத்துக் குப்பத்து வில்லனுக்கு மணம் நிச்சயிக்கிறான்.

இடைவேளைக்குப் பின் :

பேரனின் பிடிவாதக் காதலை புவ னேஸ்வரி ஏற்று, குப்பத்துக்குப் போக... ஒரு கடத்தல், ஒரு டிஷ்டிஷ்யூம், கடைசியில் ஒரு குட்டித் திருப்பம் மற்றும் இன்னபிற மசாலா காட்சிகளோடு படம் முடிகிறது.

- புவனேஸ்வரி அம்மாளாக டாக்டர் பானுமதி ராமகிருஷ்ணா நடுங்கிக் கொண்டே நடிக்கிறார்.
- பேரன் பிடிவாத பிரசாந்த் ஒரு அமுல் பேபி! அலட்டாத பேபி.
- புவனேஸ்வரியின் மாப்பிள்ளை யாக நாஸர் அமுக்கராங் கிழங்கு வில்லன்.
- செம்பருத்தியாகப் புதுமுகம் ரோஜா. படத்தில் 80 சதவிகிதம் அழகாகச் சிரித்துக் கொண்டே வளையவருகிறார்.
- மென்மையான காதல் உணர்வு களைப் பிரம்மாண்டமான திரையில் (scope) ரசிக்கும்படி சொல்லியிருக்கும் டைரக்ட ரைப் பாராட்டலாம்.
- மைசூரிலும் மற்றும் வெளிப் புறக் காட்சிகளிலும் ரவியாதவ்வின் கேமரா ஒரு கவிதை.
- தெளிவான படத் தொகுப்பு. அறி முக எடிட்டர் உதயசங்கரன் அசத்துகிறார்.
- எல்லாப் பாடல்களுமே முணு முணுக்க வைக்கின்றன.

– சுப்ரஜா ஸ்ரீதரன்



பாடத்தில் கவனம் செல்வதில்லை. எனவே பெற்றோர்கள் குழந்தைகளைத் தினமும் குறிப்பிட்ட நேரத்தில் படுக்கைக்கு அனுப்பு வதுடன், அதற்கான அவசியத்தையும் எடுத் துச் சொல்லிப் புரிய வைக்க வேண்டும்.

## ஒவ்வாமை :

ஒவ்வாமை (Allergy) நோய்களில் பல, குழந்தைகளுக்கும் ஏற்படுகின்றன. ஆஸ் துமா தவிர, மூக்கடைப்பு, மூக்கிலிருந்து நீர் வடிதல், தொண்டை கமறல், கண்களில் அரிப்பு, நீர் வடிதல் போன்ற பல அறி குறிகள் குழந்தைகளின் கவனத்தைக் கல்வி யிலிருந்து குறைத்து விடுகிறது. மேலும் இவ் அறிகுறிகளுக்கு மருத்துவமாக ஹிஸ்ட மின் எதிர் மருந்துகள் (Antihistamines) வழக்கமாகக் கொடுக்கப்படுகிறது. ஆனால் இம் மருந்துகளை எடுத்துக் கொள்பவர் களுக்கு மூளை செயல்படும் வேகத்தில் குறைவு (drowsiness) ஏற்பட வாய்ப்புள்ளது.

எனவே ஒவ்வாமை நோய்களிலிருந்து குழந்தைகளைக் காக்க, ஒவ்வாமையினை ஏற்படுத்தும் பொருட்களைத் தவிர்ப்பதே நலம்.

## சங்கடமான சரும நோய்கள் :

பள்ளிக் குழந்தைகளில் சுமார் ஐந்து சதவிகிதத்தினர் ஏதேனும் ஒரு வகைத் தோல் நோயினால் அவதிப்படுவதாக ஆய்வுகள் தெரிவிக்கின்றன. இத் தோல் நோய்களில் பல, உடலின் பல இடங்களில் அரிப்பினை (itching) ஏற்படுத்துகின்றன. குறிப்பாகப் பிறப்புறுப்புப் பகுதி, தொடை யிடுக்குகளில் ஏற்படும் அரிப்பு, தடிப்பு, புண், நீர் வடிதல் போன்ற அறிகுறிகளால் பள்ளிக் குழந்தைகளின் கவனம் படிப்பி லிருந்து சிதறி விட வாய்ப்புள்ளது.

மேலும், சற்று வயது வந்த குழந்தைகள் இவ் விஷயத்தினை வெளியில் யாரிடமும் சொல்லக் கூச்சப்படுவர். வகுப்பறையில் ஏற்படும் அரிப்பு, பாடத்தில் கவனம் செலுத்த இயலாமல் செய்து விடும். அரிப்பு ஏற்படும் போது சொறிந்து கொள்பவர்கள், யாராவது பார்ப்பது தெரியவந்தால் கூச்சத்துடன் கைகளை இழுத்துக் கொள்வதோடு ஏதோ ஒரு குற்ற உணர்வுடன் காணப்படுவர்.

தினமும் குழந்தைகள் குளிக்கும் போது அவர்களின் உடலைப் பரிசோதிப்பதுடன், உள்ளாடைகளைப் பரிசோதிப்பதன் மூலம் இந் நோய்களை அறிந்து, கூச்சம் நீக்கி மருத்துவரிடம் அழைத்துச் செல்வது அவ சியமாகும்.



# 5 ஊழியர்கள்

**சுகி சிவம்**

சென்னை நகரின் பழமைச் சிறப்புகளில் ஒன்று ஒண்டுக் குடித்தனம். ஒரே வீட்டைத் தடுத்து நீளமான நடைபாதையுடன் மத்தியதர வர்க்கத்தின் ஏழைப் பிரிவு, வறுமையோடும், நோயோடும், தங்களோடும், வெளி உலகத்தோடும் ஓயாமல் போராடும் ஸ்யமந்த பஞ்சகம் அவை. இருட்டு, துர்நாற்றம், நறுமணம், மசாலா வாசனை, தாளித நெடி, அடிகுழாய் சத்தம், அழுகை, சிரிப்பு, பகை, பாசம் என்ற புலன் நுகர்ச்சிக்கான விஷயங்கள் தாறுமாறாகப் பிணைந்து போய் விட்ட அதிசய பூமி. ஒவ்வொரு வீடுமே ஒரு முனிசிபாலிட்டி. அந்த வீட்டு உரிமையாளர் ஒரு முனிசிபல் கமிஷனர் மாதிரி.

ஒண்டுக் குடித்தன ஒலி அலைகளில் பாடம் படிப்பது, மனமாற சாமி கும்பிடுவது என்பதெல்லாம் விஸ்வாமித்திர வேலை. நிறைய மேனகைகளும் திரிசங்குகளும் இந்தத் தபோபலத்தை ஒரு வழி ஆக்காமல் விட மாட்டார்கள். பிளஸ் டு பரீட்சைக்காக விழுந்து விழுந்து படித்து விட்டு, ஊரில் உள்ள கேள்விப்பட்ட கேள்விப்படாத சகல சாமி வரிசைகளையும் நினைத்துக் கும்பிட்டுக் கொண்டு பையன் படியிறங்குவான். அப்போதுதான் எதிர்வீட்டுக்காரருக்கு ஏழுமலையான் மீது பக்தி தூள் பறக்கும். ''கோவிந்தா... கோவிந்தா...'' என்று வரப் போகும் ரிசல்ட்டுக்கு வரம் கொடுக்கும் ஆக்ரோஷத்தோடு சத்தமாகச் (திருப்பதி வரை கேட்க வேண்டாமோ?) சாமியைக் கூப்பிடுவார்... (கும்பிடுவாரா? என்பது தெரியாது). பரீட்சைக்குப் படி இறங்கிய பையன் முகம் என்னவோ மாதிரி ஆகி விடும்!

இந்த ஒண்டுக்குடித்தன அவஸ்தையை வள்ளலார், அருணகிரிநாதர், பட்டினத்தார்,



"நீயும் உன் கணவரும் 'மேட் ஃபார் ஈச் அதர்'ன்னு எதை வைச்சுச் சொல்றே...?"

"அவருக்கு 'சிகரெட்' கம்பெனியில் வேலை, எனக்கு 'கான்சர்' ஆஸ்பத்திரியில் வேலை!"

தாயுமானவர் போன்ற ஞானிகள் அனுபவித்தது உண்டு. ஆனால் கொஞ்சம் வித்தியாசம். உடலால் அல்ல... தங்கள் உயிர் அல்லது மனம் இந்த ஒண்டுக்குடித்தனத்தில் சிக்கித் தவிப்பதாகப் புலம்பிய பாடல்கள் பலப்பல... உயிர் அல்லது மனம் ஐந்து புலன்கள் மத்தியில் நடத்தும் குடித்தனமே அவர்கள் அவஸ்தை.

''ஓர வொட்டார்... ஒன்றை உன்ன ஒட்டார்... மலரிட்டு உனதுதாள் சேரவொட்டார் ஐவர்'' என்று தன் ஆன்மாவை அமுக்கிப் பிடிக்கும் ஐந்து அண்டை வீட்டாரைப் பற்றிப் புலம்பினார் அருணகிரி நாதர். அடக்க முடியாத இந்த ஐந்து முரடர்களை'' ''ஐம்புல வேடர்'' என்கிறது சைவ சித்தாந்தம். மெய், வாய், கண், மூக்கு, செவி என்கிற ஐந்து பேரும் அவ்வளவு ஆபத்தானவர்களா?

**இ**ந்த ஐந்து பொறிகளாலும் இன்பங்களை மட்டுமல்ல துன்பங்களையும் நுகர முடியும். இன்ப துன்ப அனுபவங்களைப் பொறி புலன்கள் மூலமாக நுகர்வது வாழ்வின் நியதி. கட்டாயம். இந்த ஐந்து பொறிகள் வழி பெறுவது ஐந்தறிவு; அதனைத் தாண்டி ஆறாவது அறிவின் வழி உணர்வதே கடவுள். இந்த ஐந்துமே முழு அளவில் தொழிற்பட்டுக் கொண்டிருந்தால் ஐந்தையும் தாண்டி மேலே வர முடியாது. அப்போது கடவுளை நினைப்பதற்கில்லை. புரிந்து கொள்ள வழியே இல்லை. அதனால்தான் இந்த ஐந்தையும் 'அடக்கு, அடக்கு' என்று ஞானிகள் பாடினர். ''பொறிகளின் மீது தனி அரசாணை'' என்றான் பாரதி.

இலங்கைக்குப் போன அனுமன் அசோகவனத்தை அழித்த போது இராவணனின் ஐந்து சேனாதிபதிகள் வந்து சண்டையிட்டனர். அவர்களை அனுமன் வென்றான். அந்தக் காட்சியைக் கம்பன் வர்ணித்த போது ஐந்து பொறி புலன்கள் போல ஐவர். அறிவு போல் அனுமன். அறிவு புலன் இன்பங்களை வெல்லுவது போல் அனுமன் அவர்களை வென்றான். ''அஞ்செனும் புலன்களொத்தார்; அனுமனும் அறிவையொத்தான்'' என்கிறது கம்பராமாயணம்.

உடம்பால் இன்ப நுகர்ச்சி என்பது உயிரினங்களின் அடிப்படை வேட்கை. எவ்வளவு வலிமையானது யானை? அதை எப்படிப் பிடித்து அடிமையாக்குகிறார்கள். பழக்கிய பெண் யானையை முன்னால் நிறுத்தி, பள்ளம் வெட்டி, இலை தழைகளை மேலே வைத்து மூடுவார்கள். ஆண் யானை ஆசையோடு ஓடி வரும். குழியில் விழுந்து விடும். வாழ்நாள் முழுவதும் சுதந்திரம் இழந்து அடிமையாகி விடும். மெய்யின்பம் என்பது வலிமையான யானையை அடிமையாக்கி விட்டது. அண்மைக்கால கவிஞானி கண்ணதாசன் 'கன்னியரை ஏசுதடி உள்ளம். இது காவிடறி யானை விழும் பள்ளம்' என்றது இது கருதித்தான்.

மீன் ஏன் சாகிறது? தூண்டிலில் நெளியும் இரையைப் பார்த்துப் பார்த்து உண்ணும் ஆசையால் மீன் நெருங்கியது. அந்தோ... மரணம் மீனை விழுங்கியது. மீனுக்கு வாயால் துன்பம். விட்டில் - எட்டி எரியும் விளக்கைக் கண்ணால் கண்டால் கிட்டகிட்ட வந்து நெருப்பால் கருகியே சாகும். கண்கள் அதன் சாவை முன்மொழிகிறது. வண்டு... விதவிதமான மணம் வீசும் மலரை விரும்பி மலருக்கு மலர் தாவும். ஏதோ ஒரு மலரில் கண்ணயர்ந்து உறங்கும்... மாலைக் காலம் மலர் மூடிக் கொள்ளும். மூங்கிலையே துளைக்கும் வண்டு மலரைத் துளைப்பது இல்லை. மரணத்தை முத்தமிடும். நாசியே அதன் பகை. செவியாலே அழிவது எந்த விலங்கு? சங்க இலக்கியங்களில் அகணமா என்ற பறவையைப் பற்றி எழுதுகிறார்கள். நல்ல இசைக்கு அது ஏங்குமாம். வேடுவர்கள் புல்லாங்குழல் இசைக்க அகணமா பறந்து வரும். மேலேயே வட்டமடித்து வட்டமடித்து இசையை ரசிக்கும். கீழே வேடுவர்கள் தீ மூட்டுவார்கள். இசையை நிறுத்தி, பறைகளை அடித்ததும் தடுமாறி அவை நெருப்பில் விழும். செவிப்புலன் அவைகளின் மயானக் கதவு!

**யா**னைக்கு மெய்யால் (உடம்பு) துன்பம். மீனுக்கு வாயால் மரணம். விட்டிலுக்குக் கண்ணே மயானம். வண்டுக்கு நாசி

விரோதி. அகணப் பறவையைச் செவிகளே அழிக்கும். ஆனாலும் இவை அதிர்ஷ்டசாலி கள். ஐந்து பொறிகளில் ஏதோ ஒன்றுதான் இவற்றை அழிக்கும். இவைகளுக்கு ஒரே எதிரிதான். மனிதனுக்கு... அந்தோ ஐந்து எதிரிகள்!

காலையில் பார்த்த சினிமா போஸ்டர் மாலைக்குள்ளாக ஒரு மனிதனைத் தியேட் டருக்குள் உந்தித் தள்ளுகிறது. கண்ணுக்கு அடிமையானதால் வந்த வினை. வாயைக் கட்டு என்று மருத்துவர் சொன்னதைக் கேளாத காரணத்தால் எத்தனை பேர் வீடு பார்மஸி ஆகி விட்டது தெரியுமா? பசிக்குச் செலவான தொகையை விட ருசிக்குச் செலவான தொகைதான் நம் பர்ஸைப் பதம் பார்க்கிறது.

உடம்பில் தோன்றிய ஆசைகளால் நாம் எவ்வளவு கேவலப்பட்டிருக்கிறோம். மசாலா வாசனை, செண்ட் வாசனை, மல்லிகை வாசனை என்று வாசனை வலை களில் வலுவிழந்த வாழ்க்கைகள் எத்தனை எத்தனை தெரியுமா? காரணம் - சக்கர வர்த்தியாக இருக்க வேண்டிய மனம் அடிமையானது. ஐந்து ஊழியர்களாக இருக்க வேண்டிய ஐம்பொறிகள் ஐந்து எஜமானர்கள் ஆனார்கள். மனக சந்தலாகிப் போனது.

**கூ**ங்கை ஆற்றங்கரை மாலை மணி ஐந்து. துறவு பழகும் இளந்துறவி குருநாதர் சொல்லிக் கொடுத்தபடி தவத்தில் ஆழ்ந் தார். கண்களை மூடிக் கொண்டு தவம் செய் யும் பழைய பழக்கம் அவருக்குப் பிடிக்க வில்லை. கண்களைத் திறந்து கொண்டே தவம் செய்தார். ஒரு மின்னல்... அதன் தலையில் பின்னல்... உண்மையில் அது பதினாறு வயது கன்னல்... துறவி தவத்தைக் கண் கெடுத்தது. மறுநாள் கறுப்புத் துணி யால் கண்ணைக் கட்டிக் கொண்டு வந்து உட்கார்ந்தார். சலங்... சலங்... என்ற வெள்ளிக் கொலுசு அவர் செவி வழி நுழைந்தது - சிந்தையைக் கவர்ந்தது. மனசு கொலுசாகித் தவத்திற்குத் தடை போட்டது.

மறுநாள் காதுகளைச் சுற்றிக் கட்டிக் கொண்டார் இளம் துறவி. கண்ணும் காதும் கட்டப்பட்டாலும் நாசி இன்று தலைமை ஏற்றது. மல்லிகை மணத்தில் மனமே கரைந்தது. பொறிகளைக் கட்டுவது புரியாத நிலையில் காதிகிராஃப்ட் தலை யணை உரை (அதற்குத்தான் நிறைய தள்ளு படி) வாங்கித் தலையையே மறைத்து மறுநாள் தவம்புரிந்தார் இளம் துறவி. கண் பார்க்க வில்லை... காது கேட்கவில்லை... நாசி நுகரவில்லை... பேஷ்.. பேஷ்... மணி ஐந்து... ஐந்து பத்து... துறவி கவலைப்பட் டார். "ஆமாம்... இ து தா னே வரும் நேரம்... இன்னமும் வரவில்லையே!"

**பொ**றிகளைக் கட்டுவது என்பது எப்படிச் சாத்தியம்? காந்தியடிகள் வைத் திருந்த குரங்கு பொம்மைகளைப் போல பொறிகளைக் கட்டிப் பழகிய ஞானி களைக் கேட்டால் விடை கிடைக்கும். இறைவனுடன் மனத்தை ஐக்கியப்படுத்து வதே வழி.

அதனால்தான் பெரிய பெரிய சிவன் கோவில்களில் ஐந்து பிராகாரங்கள் இருக் கும். ஒவ்வொரு பொறி தரும் இன்ப நுகர்ச்சி பற்றிய எண்ணங்களை ஒவ்வொரு பிராகாரத்திலும் விட்டு விட்டு, ஐந்தையும் தாண்டி ஆறாவது அறிவு நிலையில் இறை வனை வணங்குவதே கோவில்களின் அமைப்பு முறை.

ஆன்ம பலத்தை ஐந்து பொறிகள் வழி அதிகமாக்கிக் கொள்ளலாம். அல்லது கட்டுப்பாடின்றி அவற்றின் விருப்பப்படி மேய விட்டு விரயமும் ஆக்கலாம். அப் போது வாழ்க்கையே வீணாகிறது. ஒரு ஏரிக்குத் தண்ணீர் வருவதற்கு வெட்டப் பட்ட ஐந்து கால்வாய்கள் போல நமக்கு அறிவு வருவதற்கு வாய்த்தன ஐந்து வாயில்கள். ஐந்து பொறிகள். வீடுகளில் விளக்கேற்றும் போது ஐந்து முகமுடைய விளக்குகள் ஏற்றுவதன் நோக்கமே இது தான். ஐந்து பொறிகளும் முறையாகப் பயன்படுத்தப்பட்டால் விளக்கு போல் உலகை விளக்கும்.

பேருந்துகளில் அடிக்கடி பயணம் செய்வோர், ஜன்னல் களின் அருகில் உள்ள இருக்கைகளில் அமர்ந்தால், வெளிக் காற்று செவிப்பறையைத் தாக்காதவாறு பார்த்துக் கொள்ள வேண்டும். ஒரு கர்சீப் அல்லது துண்டு சுற்றிக் கொண்டாலும் போதும். பேருந்துகள் விரைவாகச் செல்லும் போது, காற்று செவிப்பறையைத் தாக்கினால், நரம்பு மண்டலங்களின் ஒரு பகுதி பாதிக்கப்பட்டு, மோசமான பின்விளைவுகளுக்கு வாய்ப் புண்டு என டாக்டர்கள் எச்சரிக்கின்றனர்!

– கே. என். பாலகிருஷ்ணன்



# மழை வரும்

**இந்திரா சௌந்தர்ராஜன்**

**வா**னம் வெறித்துக் கிடந்தது!

அத்தனை பெரிய ஆகாயத்தை இயற்கை எப்படித்தான் இத்தனை அழகாகச் சொட்டு நீலம் போட்டுத் தோய்த்து உலர்த்தியதோ? அது கறுத்து அழுக்காகி, கண்ணீர் விட்டு மழையாகி, அழாதா என்று எதிர் பார்த்து எதிர்பார்த்து அண்ணாமலை தினமும் ஏமாந்து கொண்டிருக்கிறான்.

''மாசம் ஆறாகப் போகுது... போன புரட்டாசி கடைசியில நாலு தூறல் இந்த நிலத்து மேல விழுந்துச்சு. அப்பால மழை வருவேனாங்குது. எஞ்சாமியே... எதுக்கு வேணா தவிக்கலாம் மக்க! மழைக்கும் தண்ணிக்கும் தவிக்கலாமா? இறங்குதியோ பெரு மழையா எஞ்சாமியே! குடிக்க, குளிக்க நாங்க படுற பாடு காணலியோ. எஞ்சாமியோ இறங்குதியோ பெரு மழையா...''

அண்ணாமலையின் உதட்டில் பெரிதான முனகல். வலக்கையை இரு விழிப் புருவம் மேல் சரிவாய்க் கவிழ்த்துத் தலையை அண்ணாத்தி வானம் பார்த்து முனகிய அந்த முனகலை, சுப்பிரமணி ஓட்டி வந்த ட்ரைவீலர் சைக்கிள் வண்டி கலைத்துப் போட்டது.

'கிச்ச்... கிச்கிச்...' பிரேக்கடித்து நிற்கும் ட்ரைவீலரின் சதுர இருக்கையில் தண்ணீர்த் தவலைகளின் தளும்பல்.

''அண்ணாமலை ஒருவழியா இன்னிக்கு ஒரு பத்து குடம் தேத்திட்டேன். குடம் தண்ணி அறுபது காசிலிருந்து எழுபது காசாயிடுச்சு. நல்ல தண்ணி ரெண்டு ரூவாயாம். அதுக்கும் அனுமாரு வாலா க்யூ வரிசை. நம்ம பெத்தபெருமாள் சாராயத் தண்ணியில குடிச்சே விட்ட காசை, கிணத்துத் தண்ணியில தேத்திட்டான் அண்ணாமலை...''

அபிப்ராயங்களுடன் தவலைகளை இறக்கத் தொடங்கினான் சுப்பிரமணி. அண்ணாமலை முகம் அதைக் கேட்டு வெளிறி விட்டிருந்தது.

''கடன்ல மூழ்கிப் பிச்சை எடுக்கத் தெரிஞ்ச பய நம்ம பெத்தபெருமாள். இப்ப பார், கிணத்துத் தண்ணியை வித்துப் பிழைக்கிறதை! ஊரே காஞ்சு பாலை ஆனாலும் அவங்கிணத்து ஊத்து மட்டும் உடாம சுரக்குது! லட்சுமி அவங்கிட்ட கிணத்து ரூபத்துல வந்து உக்காந்திட்டா. தெரியுமா? லாரி தண்ணி எண்ணூறு ரூவான்னு ஒரு நாளைக்கு நாலு ட்ரிப் அடிக்கான். இப்பல்லாம் ஒரு குடம் இரண்டு குடம்னு யாராச்சும் தண்ணி கேட்டு வந்தா பெத்து கடூரமா முறைக்காம்பா!''

தவலைகளை இறக்கும் சுப்பிரமணியின் பேச்சு அண்ணாமலையின் முகத்தில் பட்டாசைக் கொளுத்திப் போட்டிருந்தது.

உடம்பில் சித்திரை வெயிலின் பிராண்டல். சூரியன் பூமியைப் பொசுக்க சமீபித்து விட்ட மாதிரி ஒரு காய்ப்பு. இயற்கையே மாறிப் போய் விட்ட மாதிரி ஒரு பிரமை. பிரமை இல்லை சத்யம்!

''அந்தக் காலத்துல நம்ப ஊர் ஆத்துல தான் என்னமா தண்ணி ஓடும். இப்ப ஆத்தையே காணோம்! ஒலகத்துல காசு பணத்தைத் திருடிப் பாத்துருக்கேன். ஆத்தையே திருடற ஒரே நாடு நம்ப நாடுதாம்பா... ரவையோட ரவையா வண்டி மண்ணடிச்சு வண்டி மண்ணடிச்சு, அப்படியே கரையோரமா குடிசையைப் போட்டு மெள்ள ஆத்து நிலத்தை வளைச்சி இப்ப பிளாட் போட்டு விக்கவே ஆரம்பிச்சிட்டாங்க...'' சுப்பிரமணி அங்கலாய்க்க...

''சரி சரி ஊர்க் கதையைப் பேசி நம்ப பொழப்பை மறக்க வேண்டாம் போய்க் கடையைத் தொறக்கற வழியைப் பாரு...''

- அண்ணாமலையின் அதட்டலைத் தொடர்ந்து தவலைகள் மளமள என்று இறங்கி அவன் வீட்டுக்குள் நுழைகின்றன.

**வீ**ட்டுக்குப் பக்கவாட்டில் தட்டி அடைத்த ஒரு கூரை வீடு. தட்டியை விலக்கி விட்டுப் பார்த்த போது ஒரு பெரிய விறகு அடுப்பும் தோசைக் கல்லும் தெரிந்தது.

ஊருக்குச் சோறு போடும் சின்ன ஓட்டல் அது என்பது உடனேயே புரிந்து போனது. பத்து பேர் உட்கார்ந்து சாப்பிடத் தோதாக மர பெஞ்சுகள். சிக்கனமான



செலவில், பெயிண்ட் கூட அடிக்காமல் தயாரிக்கப்பட்ட மேஜை.

சுப்பிரமணி கடையைக் ஊைப்ப ஆரு ரானான். மறக்காமல் 'தண்ணீரைச் சிக்கன மாக உபயோகிக்கவும்' - போர்டை எடுத்து வந்து முன்னால் மாட்டினான்.

இப்பொழுது அண்ணாமலை கல்லா வில் ஏறி உட்கார்ந்து விட்டிருந்தான். முகத் தில் அந்தக்கவலை ரேகைகளின் நடனம் முடிந்த மாதிரி தெரியவில்லை.

பெட்ரோல், மண்ணெண்ணெயைப் போல் தண்ணீரை விலைக்கு வாங்கி ஜீவிக்க வேண்டிய கட்டாயம் அவனை என்னவெல் லாமோ செய்து கொண்டிருந்தது.

ஒரு வாளி தண்ணீரில் குளிக்க முனைந் தால் உடம்பின் மேல் இருநூறு ஒற்றைக் காசுகளைக் கொட்டிக் கொள்வது போல் படுகிறது.

சுப்பிரமணி விறகைச் சிபிட்டிக் கொண்டிருந்தான் அடுத்து பரோட்டாவிற்கு மாவு பிசைய வேண்டும்.

எங்கே இந்த சின்னம்மிணி? - பார்வை வீதியைப் பார்த்தது.

நொண்டி நொண்டி நடக்கும் சின்னம் மிணிதான் வெங்காயம் நறுக்கி, சட்டினி ஆட்டி, பத்து பாத்திரம் தேய்த்து, சாப்பிடு பவரின் இலையை எடுக்க வேண்டியவள்.

மணி நான்கைத் தாண்டி விட்டிருந்தது.

ஐந்துக்கெல்லாம் முதல் கற்று டிபன் ரெடியாக வேண்டும். இவள் எங்கே தொலைந்தாள்?

எழுந்து வெளியே போய் விசாரித்த போதுதான் அது தெருக் குழாய்த் தண்ணீர் வரும் நேரம் என்பதிலிருந்து, மூன்று நாளைக்கு ஒருமுறை, முறை வைத்து வரும் தண்ணீரை அந்த நாலிலிருந்து ஐந்து மணிக்குள் பிடித்துக் கொண்டால்தான் அடுத்த மூன்று நாளைக்கு அந்த பிராந்திய மனிதர்கள் நல்ல சமையலோடு தண்ணீர் குடித்து உயிர் வாழ முடியும் என்பது வரை யிலான தகவல்கள் ஞாபகம் வந்தன.

''நான் போய்ச் சின்னம்மிணியைக் கையோடு இழுத்துக்கிட்டு வரேன். அது தண்ணி பிடிக்க வரிசையில நிக்கறதாக் கேள்விப்பட்டேன்'' - இது சுப்பிரமணி.

''எலே... கைல ஒரு குடம் கொண்டு போ. வரையில அப்படியே முடிஞ்சா பிடிச் சுக்கிட்டு வா'' - இப்படிச் சொல்வது அண்ணாமலை.

''காலைல இருந்து குடத்தை வரிசை யில வெச்சு காத்துக்கிட்டு கிடக்கற பொட் டச்சிங்க எனக்குப் பாடை கட்டிருவாங்க. ஞாபகத்துல வெச்சுக்க...''

பேசி விட்டு அண்ணாமலை வீதிகளில் வேகமாக இறங்கி நடக்கிறான்.

தெருக் குழாயில் தண்ணீருக்காக நடந்த யுத்தத்தில் பரஸ்பரம் ஸ்னேகம் எல் லாம் நாசமாகி அவரவர் சுயநலமே முன் நின்றது. அவரவர் பலத்தைப் பொறுத்து ஆதிக்கம் செலுத்தும் கொடுமை கும் மென்று நடந்து கொண்டிருந்தது.

''இங்க குடிக்க தண்ணியைக் காணோம். இவளுக்குக் குளிக்க நல்ல தண்ணி கேக்குதோ. ஆளுக்கு ஒரு குடம்னா ஒரு குடம்தான்.''





## அருள்வாக்கு



### நிவேதனம்

பகவானுக்குக் காட்டி விட்டுச் சாப்பிட வேண்டுமென்பது முக்கியம். வேறே பூஜை என்று பெரிசாகப் பண்ணாவிட்டாலும் நமக்குக் கையைக் கொடுத்து அந்தக் கையாலேயே சமைத்துக் கொள்ளணும் என்ற புத்தியைக் கொடுத்து ஸ்வயம்பாகம் பண்ணிக் கொள்ள வைத்தவனுக்கு அதைக் காட்டி, நிவேதன மாக்கி, அதில் இருக்கக்கூடிய கொஞ்சம் நஞ்சம் தோஷத்தையும் போக்கி விட வேண் டும்.

தெலுங்கு தேசத்தில் ஆயிரம் பேர் ஸமாராதனை என்று உட்கார்ந்தாலும், ப்ராண ஹுதி பண்ணுவதற்கு முன்னாடி ஒவ்வொ ருத்தனும் இஷ்ட தெய்வத்தை நினைத்து ஸ்வாமி நைவேத்யம் பண்ணித்தான் சாப் பிடுவான்.

வேறே மூர்த்தி, விக்ரஹம் இல்லா விட்டாலும் ப்ரத்யக்ஷ பகவானாயிருக்கிற ஸூர்யனுக்காவது நைவேத்யம் செய்ய ணும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்க ராச்சார்ய சுவாமிகள்**

''எவடி ஒரு குடம்னு கணக்குப் பேசறது. நாங்க ஒரு நாலு ஊட்டுக்காரங்க எழுதிப் போட்டு வர வெச்ச குழாய் இது. என் ஊட்டுக்காரர் முனிசிபாலிடில தாசில் தார் பியூனா இருக்கற செல்வாக்குல வர வெச்ச குழா இது. இதுல நா பிடிக்க கணக்கு பாக்கற சிறுக்கி எவ...?''

சுப்பிரமணி தெருக் குழாயை நெருங்கி விட்டச் சமீபத்தில் அவன் காதில் இப்படி வார்த்தைகள் விழுந்தன. சின்ன அம்மிணி தான் வாயைக் கொடுத்து மாட்டிக் கொண் டிருந்தாள்.

சீக்கிரத்திலேயே அங்கு கூந்தல் பிடி யுத்தம் மூளத் தொடங்கியது. தப்பித்தோம் பிழைத்தோம் என்று ஓடி, கடைக்கு வந்து சேர்ந்த போது அண்ணாமலை ஒரு நோட் டீஸ் படித்துக் கொண்டிருந்தான். அதை மடித்தபடியே சுப்பிரமணியை 'எங்கே சின்ன அம்மிணி?' என்பது போல பார்த் தான்.

''அவ வர மாட்டா அண்ணாமலை. இனி நான் பரோட்டா மாஸ்டர் மட்டு மில்ல. ஆல் இன் ஆல் அழகு ராஜா'' என்று கூறியபடியே அடுப்பை உணக்கி விட்டான்.

''ஆமா என்ன நோட்டீஸ்?''

''யாரோ ஒரு சாமியார் வரப் போறாங் களாம் நம்ம ஊருக்கு.''

''ஐயோ பாவம்... இந்தத் தண்ணியில் லாத காட்டுக்கு எதுக்கு வர்றாராம்...''

''ஜனங்களை ஆசிர்வாதம் பண்ண...''

''இப்ப ஆசீர்வாதமா பெரிசு... தண்ணி தானே அண்ணாமலை...''

''எலே... நம்ம தண்ணி பிரச்னை ஒரு தீராத பிரச்னை. அது சாகற வரை தீரப் போறதில்லை. அதுக்காகச் சாமியாரை மட்டமா பேசாதே... அவர் பெரிய சித்து வேலைக்காரராம் குஷ்டம், தொழுநோய், ஏன் புத்து வியாதியையே குணப்படுத்துன மகானாம். அவரைப் பார்த்தாலே நம்ம பாவம் பறந்துருமாம்...''

''நெஜமாவா?''

''சத்தியமாடா... இவரைப் பத்தி நான் முந்தியே கேள்விப்பட்டிருக்கேன்...''

''அப்ப போய்ப் பாத்துருவோம்...''

அப்படிப் போய்ப் பார்த்த போது ஊரே திரண்டு வந்திருந்தது. ஏக கூட்டம்! ஆளுக்கு ஆள் கோரிக்கை. சாமியார் அதன் முன் திணறிக் கொண்டிருந்தார்.

''சாமி என் மக கல்யாணம்.''

''கூடிய சீக்கிரம் நடக்கும்.''

''சாமி நான் சொந்தத் தொழில் செஞ்சா லாபம் வருமா?''

''நேர்மையா செஞ்சா நிச்சயம் வரும்.''

''சாமி என் மாடுங்க ரெண்டு காணாம போயிருச்சு. திரும்பக் கிடைக்குமா?''

''ஊர்க்கோடில இருக்கற வாழைத் தோப்புல மேஞ்சிகிட்டிருக்கு...''



# VISWAPRIYA GROUP



**உங்கள் நன்மைக்காக உலகிலேயே முதன்முறையாக வழங்கப்படும் முதலீட்டுத் திட்டம்**

**நன்மைகள் :**

- ரூ. 10,000/- அளவு சிறிய தொகை கூட முதலீடு செய்யலாம்.
- **மாதந்தோறும் 1.5%** வருவாய் வீடு தேடி வரும், ஆகையால் ஆண்டு வருவாய் காம்பௌண்ட் முறையில் **19.5%** ஆகும்.
- முதலீட்டு தொகை முழுமையாக மூன்று வருடங்களுக்குள் திரும்ப பெறலாம்.
- **மாத வருவாய்** அனைத்தும் **வங்கி உத்திரவாதம்** பெற்றதாகும். இது மட்டுமல்ல, முதலீட்டு காலத்தின் முடிவில் முதலீடு **திரும்ப பெறுதலும்** வங்கி உத்திரவாதம் பெற்றதாகும்.
- வங்கி உத்திரவாதம், தேசிய மயமாக்கப்பட்ட அல்லது **பன்னாட்டு** வங்கியிடமிருந்து பெறப்படும், ஆகையால் முழு மையான பாதுகாப்பு.
- இந்த திட்டத்திற்கு அறங்காவலர் மற்றும் பாதுகாப்பாளர் பொறுப்பை **லவ்லாக் & ஓரயீஸ்** (**Love Lock & Lewes, Chartered Accountants**) நிறுவனம் ஏற்றுக் கொண்டுள்ளது. உங்கள் பணம் மேற்கண்டவாறு முதலீடு செய்யப்படுகின்றன என்று இவர்கள் உறுதி செய்வார்கள்.

**முதலீடு செய்வதற்கு எல்லா பிரபல இன்வெஸ்ட்மென்ட் ஏஜென்ட்கள் அல்லது கீழ்க்கண்ட கரூர் வைஸ்யா பாங்க் நிறுவனங் களிலிருந்து விண்ணப்பப் பத்திரங்களை உடனடியாக பெற்றுக் கொள்ளுங்கள்.**

**Andhra Pradesh :** Hyderabad, Secunderabad, Chitoor, Guntur, Cuddappah, Kurnool, Nellore, Rajamundry, Tirupati-Main (Gandhi Road), Vijayawada - (Governorpet). **Gujarat :** Ahmedabad, Surat. **Karnataka :** Bangalore - Main (Avenue Road), Mysore. Kerala : Ernakulam, Kozhikode, Trivandrum. Bombay : Mandvi. **New Delhi :** Karol Bagh. **Pondicherry :** Nehru Street. **Tamil Nadu :** Madras - Main (Thambuchetty Street), Madurai - Main (Amman Sannathi Street), Coimbatore - Main, (Oppanakara Street), Salem - Main, (Car Street), Cuddalore, Erode, Dindugal, Chidambaram, Kancheepuram, Karur -Central, Kovilpatti, Kumbakonam, Mettur Dam, Nagercoil, Namakkal, Palani, Palayamkottai, Pollachi, Ramanathapuram, Thanjavur, Theni, Trichi, Tiruppur, Tuticorin, Udumalpet, Vellore, Villupuram, Nagapatnam.

## VISWAPRIYA FUNDS MANAGEMENT

*Division of :* Viswapriya Financial Services & Securities Limited
'Viswapriya,' Kasturba Nagar, Adyar, Madras - 600 020.
Phone : 410396/418988 Telex : 041-5425 Fax : 410639

- கூட்டமும் சாமியாரும் இப்படியான பரபரப்பில் கிடக்க, அண்ணாமலை தன் பத்து வயது மகளுடன் வந்திருந்தான்.

- சாமியாரிடம் என்ன கேட்கலாம்?

- மனது கூட்டல் கழித்தல் கணக்குகள் போட்டது.

'வில்லங்கத்தில் இருக்கும் சொத்து மீண்டும் கைக்குத் திரும்புமா?'

'மனைவியின் ஆஸ்துமா குணமாகுமா?'

'தனக்கு ஆண் பிள்ளை பாக்கியம் உண்டா?'

எதைக் கேட்க எதை விட?

ஒருவழியாக அந்த களேபரத்தில் சொத்து பற்றிக் கேட்க, சாமியார் சுபமாக முடியும் என்று கையை உயர்த்தி ஆசீர் வதிக்க, புளகாங்கிதப்பட்டு போனான் அண்ணாமலை.

வெளியே வந்த போது கப்பென்று காத்திருந்த கடன்காரனைப் போல் பிடித்துக் கொண்டது தண்ணீர்ப் பிரச்னை.

''ஹாம்... போய்த் தண்ணியைப் பிடிக்க வழி பாக்கணும். இல்லாட்டா இன்னிக்கு ஓட்டலைத் தெறக்க முடியாது...''

அப்பொழுது அவன் மகள் கேட்டாள்.

''அப்பா கன்னுக்குட்டியை வித்துடப் போறியா?''

''ஆமா... உனக்கு யார் சொன்னது?''

''அம்மா சொன்னிச்சு... ஏன்?''

''நாம குடிக்கவே இங்க தண்ணியக் காணோம். இதுக குடிக்க குடம் குடமா நா எங்க போவேன்?''

''தண்ணி கெடைச்சா விக்க மாட்டே தானே?''

''மாட்டேன்.''

''அப்ப ஏன் சாமியார்கிட்ட மழை எப்ப வரும்னு கேக்கல நீ?''.

- அந்தக் கேள்வி அவன் பொட்டில் வலிக்க விட்டது.

''தோணலன்னுதான் சொல்லணும்'' என்றான் மெலிய.

''நான் போய் மழை எப்ப பெய்யும்னு கேட்டு வரட்டா?''

''நீ எல்லாம் கேட்டா அவர் பதில் சொல்ல மாட்டார். நீ சின்னப் பொண்ணு..''

''இல்ல சொல்வார்... எனக்கு என் கன்னுக்குட்டி வேணும். அதை நீ விக்கக் கூடாது. பாவம் அது! அது குடிக்க தண்ணி வேண்டாமா?''

அண்ணாமலைக்கு இதயம் மணலில் புரண்ட மாதிரி வலித்தது. 'ஒருவருக்குக் கூட சுயநலமில்லாமல் இப்படிப் பொதுவான ஒரு வரம் கேட்கத் தோன்றவில்லையே...' - அழுத்தமான கூச்சம் அவனுக்குள் பெருக்கெடுத்தது. தலை தாழ்ந்து போனது.

பொன் விழா கவிதைப் போட்டி





# வாடும் குயில்

கானம் பாடும் சின்னக் கருங்குயில் கரிசல் காட்டைக் கண்டதுவே
கண்க ளிரண்டில் நீரைத் தேக்கிக் கலக்கமிகக் கொண்டதுவே
வானம் பார்த்த பூமியெங்கிலும் வட்டம் போட்டுப் பறந்ததுவே
வாடிநின்ற பயிர்கள் கண்டு வாட்டங் கொண்டு நின்றதுவே
மானம் காத்த மறவர் கூட்டம் மகிழ்ந்து வாழ்ந்த பூமியில்
மாரி பொய்த்துப் போனதெண்ணி மனத்தில் துயர் கொண்டதுவே
தண்ணீர் காணாத் தரையைக் கண்டு தவிப்பாலது தளர்ந்ததுவே



வருண தேவன் கருணை வேண்டி வாடிநின்ற பூங்குயிலும்
வானிலாடும் மேகங் கண்டு மோகங் கொண்டு கேட்டதுவே
தருணம் வந்து நீகனிந்து தரணி காக்க மறந்ததேன்
தவிக்கு மாந்தர் தாகந்தீர தயவுகாட்ட மறுத்ததேன்
உருகு மெந்தன் உள்ளம் பார்த்தும் ஊமையாகிப் போனதேன்
ஊர்ந்து செல்லும் முகிலுனக்கு இதயம் கல்லாய் ஆனதேன்
மருகி நிற்கும் பறவை கண்டு மனமும் கொஞ்சம் இரங்குவாய்
மண்செழிக்க மழைபொழிந்து மகிழ வைப்பாய் என்றதுவே

நஞ்செடுத்து நெஞ்சில் வைத்து நாணயத்தைத் தவற விட்டு
நன்றி கொன்று வாழுகின்ற மாந்தர்தம்மின் செயலைக் கண்டு
அஞ்சிநானும் ஓடுகின்றேன் அறத்தை நாளும் தேடுகின்றேன்
அன்பெடுத்துத் தேக்கிவைக்க அகத்தைத் தேடி வாடுகின்றேன்
மஞ்செடுத்து மடியில் வைத்து மார்சுரக்கு மலைமா அன்னை
மரமறுக்க வாளெடுக்கும் கொடுமை கண்டு கதறி நிற்க
வஞ்சமிங்கே பெருகிப்போச்சு வாய்மையிங்கே கருகிப் போச்சு
வாடவேண்டு மிந்தமாந்தர் என்றதுவும் சொல்லிப் போச்சு

மலையில் பட்ட உளியால் கற்கள் சிதறித் தெரித்தாற்போல்
மனதைச் சுட்ட செயலைக் கண்டு கலங்கித் துடித்ததுவே
உலையில் பட்ட இரும்பைப் போல உள்ளம் நைந்திடவே
ஓரம் நின்ற சிலையை நாடி அடியி லமர்ந்ததுவே
தலையில் பட்டு சிறகை நனைத்தத் தண்ணீர் துளிகண்டு
தவிப்பிற் கிடையே சிரத்தைத் தூக்கி அண்ணாந்து பார்த்ததுவே
அலையில் பட்ட கலமாய் நெஞ்சம் உழன்று உடைந்திடவே
ஆறுங் கண்ணீர் அதன்மேல் விட்டவர் அனல்கவி பாரதியே.

பி.ஏ. ஜவஹர்லால்

# சாந்தாராமுடன் ஒரு சந்திப்பு

சித்ராலயாவில் பார்ட்னராக இருந்தது மட்டுமின்றி, ஆஸ்தான கேமிராமேன் போல இயங்கியவர் வின்ஸெண்ட். ஆனால் அவர் 'வெண்ணிற ஆடை' படத்தில் பங்கேற்கவில்லை. ஏன்?

'காதலிக்க நேரமில்லை' படம் முடிந்த சமயம், வின்ஸெண்ட் என்னிடம் தயங்கித் தயங்கி ஒரு விஷயத்தைச் சொன்னார் : ''எனக்கு நிறைய மலையாளப் பட வாய்ப்புக்கள் வருகின்றன. அதுவும் காமிரா, டைரக்ஷன் ஆகிய இரண்டு அம்சங்களுக்குமான வாய்ப்புக்கள்!''

அவருக்கு அதை ஏற்பதில் நாட்டமில்லை என்றால் என்னிடம் அது பற்றிப் பேசியிருக்கப் போவதில்லை. என் நெருங்கிய நண்பருக்கு டைரக்ஷன் வாய்ப்பு வரும் போது நான் குறுக்கே நிற்கவும் விரும்பவில்லை.

எனவே நான், ''வின்ஸெண்ட் உங்களுக்கு என் வாழ்த்துக்கள். நீங்கள் தாராளமாக மலையாளப் படங்களுக்குப் பணியாற்றுங்கள். கூடவே சித்ராலயாவுக்கும் உங்கள் ஆற்றல் பயனாகட்டும்'' என்றேன்.

மறுபடி வின்ஸெண்ட் தயக்கத்துடன் பேசினார் : ''வெளியிலும் பணிபுரிந்து கொண்டு சித்ராலயாவுக்கும் வேலை செய்வது என்பது, எவ்வளவுதான் நண்பர்கள் என்ற முறையில் நாம் அட்ஜஸ்ட் செய்து கொண்டாலும், பின்னால் சில பிரச்னைகளைத் தோற்றுவிக்கும் என்று எண்ணுகிறேன். வீணான மனக் கசப்புக்கு நாம் ஆளாகும்படி நேர்ந்து விடக் கூடாது. சகோதரர்கள் போல் பழகியவர்கள், சந்தோஷமாகப் பிரிவதே நல்லது என்று நினைக்கிறேன்'' என்றார். அவருடைய மனம் திறந்த பேச்சு என்னைக் கவர்ந்தது. பிரியா விடை கொடுத்தேன். அதன் பிறகு சித்ராலயாவுக்காக ஒரு மலையாளப் படத்தை அவரே டைரக்ட் செய்தார். பிரேம் நஸீர், சாரதா நடித்த படம். பெயர் 'திரிவேணி.'

வின்ஸெண்டுக்குப் பதில் யார்? வெண்ணிற ஆடை தயாரிப்பின் போது இந்தக் கேள்வி எழுந்தது. வின்ஸெண்ட் போல திறமைசாலியாகவும் இருக்க வேண்டும்; முழுமையான ஈடுபாட்டுடன் உழைக்கவும் வேண்டும்; கலர் டெக்னிக்கும் தெரிந்திருக்க வேண்டும்.

எனக்கு, ''ஜனக் ஜனக் பாயல் பாஜே'' படம்தான் நினைவுக்கு வந்தது. அதில் காமிரா மிகவும் அற்புதமான முறையில் கையாளப்பட்டிருந்ததைப் பார்த்துப் பார்த்து ரசித்தவன் நான். அதே காமிராமேன் - பாலகிருஷ்ணா - தெற்கே வருவாரா? கேட்டுப் பார்த்து விடலாமே!

பம்பாய் சென்று பாலகிருஷ்ணாவுடன் ஃபோனில் தொடர்பு கொண்டேன். அவர், ''சாந்தாராம் ஸ்டுடியோவில் ஷூட்டிங் இருக்கிறது; அங்கே வந்தால் சந்திக்கலாம்'' என்றார். போனேன். போகும் வழியெல்லாம் பழைய நினைவுகளில் ஆழ்ந்திருந்தேன்...

'நெஞ்சில் ஓர் ஆலயம்' அபார வெற்றி பெற்ற பிறகு அதை இந்தியில் நான் எடுத்துக் கொண்டிருந்த தருணம். இந்தியில்



☛ சாந்தாராம்

வசனம் எழுதியவர் அர்ஜுன் தேவ் ரஷ்க் என்ற பிரபல எழுத்தாளர். அதே சமயம் அவர் சாந்தாராமுக்கும் ஒரு படத்துக்கான வசனம் எழுதிக் கொண்டிருந்தார். அவர் சாந்தாராமிடம் ''நெஞ்சில் ஓர் ஆலயம்'' பற்றிப் பேசியிருக்கிறார். ''ஆழமான கதை; ஒரே செட்டில் எடுக்கப்பட்ட அற்புதமான படம்; இப்போது இந்தியில் எடுக்கிறார்கள்; நான்தான் வசனம் எழுதுகிறேன்'' என்று சொல்லியிருக்கிறார். அது மட்டுமல்ல, '' 'சாந்தாராம்தான் என் மானசீக குரு' என்று ஸ்ரீதர் அடிக்கடி கூறிக் கொண்டிருக்கிறார்'' என்றும் தெரியப் படுத்தியிருக்கிறார்.

இதைக் கேட்டதும் சாந்தாராம் ''அப்படியா, நான் அந்தப் படத்தைப் பார்க்கணுமே'' என்று விருப்பம் தெரிவிக்க, அர்ஜுன்தேவ் என்னுடன் தொடர்பு கொள்ள, எனக்கு மெய்யாலுமே மெய் சிலிர்த்து விட்டது! சாந்தாராம் என் படத்தைப் பார்க்க விருப்பம் தெரிவிக்கிறார்

என்றால் அது எவ்வளவு பெரிய பாக்கியம்! பள்ளி மாணவனாய் இருந்த காலத்திலிருந்தே அவர் படங்களைப் பார்த்துப் பார்த்து ரசித்து, என் கலை உணர்வுகளை வளர்த்துக் கொண்டவனாயிற்றே, நான்! உடனடியாக ''நெஞ்சில் ஓர் ஆலயம்'' பிரதி ஒன்றை, சாந்தாராம் பார்ப்பதற்காக பம்பாய்க்கு அனுப்பி வைத்தேன். இரண்டாவது நாள் எனக்கு ஒரு தந்தி வந்தது, சாந்தாராமிடமிருந்து!

படத்தைப் பார்த்து மகிழ்ந்து பாராட்டியிருந்தார் சாந்தாராம். அத்துடன் நில்லாது, ''நீங்கள் பம்பாய் வரும் போது அவசியம் என்னை வந்து சந்தியுங்கள்'' என்றும் தந்தியில் குறிப்பிட்டிருந்தார்!

**எ**ன் கண்களில் ஆனந்தக் கண்ணீர் துளிர்த்தது. என் மானசீக குரு, சினிமாக் கலை ஆர்வத்தை என் உள்ளத்தில் வளர்த்தவர், எனக்கு ஆதர்ச புருஷராக விளங்கியவர், என் படத்தைப் பார்த்து விட்டு என்னைப் பாராட்டியது மட்டுமல்ல; சந்தித்துப் பேசவும் விரும்புகிறார்!

பிறவிப் பயன் பெற்று விட்ட மன நிறைவுடன், மனம் கொள்ளாது பொங்கிப் பிரவகிக்கும் குதூகலத்துடன் அடுத்த நிமிஷமே பம்பாய் செல்லத் துடித்தேன். தந்தி வாசகத்தின்படி பம்பாய் போக வேண்டிய தொரு சந்தர்ப்பத்துக்காகக் காத்திராமல், சாந்தாராமைச் சந்திப்பதற்காகவே பம்பாய் போனேன். போனில் தொடர்பு கொண்டு, அவருடன் பேசும் பாக்கியத்துக்காகவே பம்பாய் வந்திருப்பதாகக் குறிப்பிட்டு, நேரம் ஒதுக்குமாறு கேட்டேன்.

சாந்தாராம் குறிப்பிட்ட நேரத்தில் அவர் ஸ்டுடியோவில் இருந்தேன். அவர் என்னைக் கைகுலுக்கி வரவேற்றதுடன் நிற்கவில்லை. கட்டிப் பிடித்து, தட்டிக் கொடுத்துப் பாராட்டினார். சுமார் ஒரு மணி நேரத்துக்கும் மேல் எனக்கு ஒதுக்கி, என்னுடன் பேசிக் கொண்டிருந்தார். என் வாழ்நாளில் எனக்கு இதைவிட முக்கியமான ஒரு நிகழ்ச்சி இருந்ததில்லை; இனியும் இருக்கப் போவதில்லை.

**சா**ந்தாராம் ஸ்டுடியோவுக்கு பாலகிருஷ்ணாவைச் சந்திக்க நான் போய்க் கொண்டிருந்த போது எனக்கு மேற்கண்ட நினைவுகள் அலை அலையாக எழுந்தன. சாந்தாராம் தமது யூனிட்காரர்களிடமும் என்னைப் பற்றி சொல்லியிருப்பார் போலும். பாலகிருஷ்ணா ஏற்கெனவே என்னைப் பற்றியும் என் படங்கள் பற்றியும் நன்கு அறிந்தவராகக் காணப்பட்டார்.

**டைரக்டர் ஸ்ரீதர்**



''மேனேஜர் சார்! அறுபத்து மூவர் உற்சவத்துக்கு ஒருநாள் லீவ் வேணும்...''

''அறுபத்துமூவர் பெயர்களையும் ஒன்றுவிடாமல் சொல்லு... நிச்சயம் லீவ் தர்றேன்...!''

கலரில் வெண்ணிற ஆடை படம் எடுக்க உத்தேசித்துள்ளதையும், வின்சென்டின் பிரிவு குறித்தும் நான் குறிப்பிட்டு; பாலகிருஷ்ணாவின் ஒத்துழைப்பைக் கோரினேன். அவர் சந்தோஷமாக ஒப்புதல் அளித்தார். ''நான் இப்போ ரொம்ப பிஸி இல்லை, உங்களுக்கு எப்போது வேணுமானாலும் வருகிறேன்'' என்றார்.

''சித்ராலயாவில் மாதச் சம்பளத்துக்குப் பணிபுரிய முடியுமா?'' என்று கேட்டதற்கும் சம்மதம் தெரிவித்தார். சாந்தாராம் வருடத்துக்கு ஒரு படம்தான் எடுப்பார் என்பதால் அட்ஜஸ்ட் செய்து கொள்ளலாம் என்று சொன்னார்.

வெண்ணிற ஆடையில் பாலகிருஷ்ணாவின் படப்பிடிப்பு பிரமாதமாக அமைந்து, பாராட்டுக்களைக் குவித்துக் கொண்டது.

**வெ**ண்ணிற ஆடைக்குப் பிறகு 'என்ன படம்' என்று யோசித்த போது, ''அடடா, சிவாஜியுடன் சேர்ந்து பணியாற்றி ரொம்ப நாளாகி விட்டதே'' என்ற எண்ணம் எழுந்தது. அந்தச் சமயம் நமது அண்டை நாடான பாகிஸ்தானுடன் நமக்குச் சுமுகமான உறவு இல்லாதிருந்தது. பரஸ்பரம் பகை வளர்ந்து, 'எந்த நேரமும் சண்டை மூளலாம்' என்ற ஆபத்தான நிலை. இந்தச் சூழ்நிலையில் யுத்த களமும் அதனிடையே கம்பீரமான ராணுவ கர்னலாக சிவாஜியின் உருவமும் மாறி மாறி என் உள்ளத் திரையில் தோன்றின.

## ஹிந்தியுடன் நீதிபோதனை!

சமுதாயத் தொண்டு புரிந்து வரும் ஆரிய சமாஜம் அமைப்பின் திருவல்லிக் கேணி கிளையில் இலவச ஹிந்தி வகுப் புக்கள் நடத்த சேவா மனப்பான்மை உடைய ஆண், பெண்கள் தேவை. ஹிந்தி யில் புலமையோடு நீதிபோதனை செய்யும் ஆற்றலும் உள்ளவர்கள் தயவு செய்து தொடர்பு கொள்ளவும்.

- ந. திருநாவுக்கரசு,
செயலர், ஆரிய சமாஜம்,
திருவல்லிக்கேணி கிளை,
28, எச். எம். ஏ. தெரு,
சென்னை - 600 005.

## முதலீடு இரண்டு லட்சம்

வெளிநாடுகளில் பணிபுரியும் நான் விடுமுறையில் கோவை வருகிறேன். ஆரம்ப முதலீடாக இரண்டு லட்சத்தில் தொழில் தொடங்க எண்ணம். தொழில் அறிவும் அனுபவமும் உள்ள அன்பர்கள் ஆர்வம் இருந்தால் கூட்டாகவோ அல்லது தொழில் நிர்வாகியாகவோ பணியாற்றத் தொடர்பு கொள்ளவும். ஏற்றுமதி செய்யப் படும் பொருள்கள் உற்பத்தி எனில் முன்னு ரிமை தரப்படும். மே 20 முதல் ஜூன் 20 வரை முகவரி :

- மோகன் ராஜ்,
6-ஏ, அப்புசாமி நாயுடு லே-அவுட்,
புலியகுளம், ரெட் ஃபீல்டு அஞ்சல்,
கோவை - 45.

## கதைக் கணக்கும்
## புதிர் கணக்கும்

பழங்கால கிராமியக் கதைக் கணக்கு கள், புதிர் கணக்குகள், மாயச் சதுரங்கள் பற்றிய பாடல்களைத் தொகுக்கும் பணி யில் ஈடுபட்டுள்ளேன். உங்கள் ஊரிலுள்ள முதியவர்களிடம் கேட்டறிந்து விடை களுடன் அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். கணிதப் பிரதிகள் இருந் தால் அவற்றையும் அனுப்பி உதவுக.

- ஜி. ஜானகிராமன்,
கோட்டைமருதூர்,
தருபாவனம் (வழி),
வள்ளலார் மாவட்டம் - 605 756.

## சோயா பயிர் சுலபமானது

சோயா பயிர் செய்வது சுலபமானது. குறைந்த அளவு தண்ணீர் போதும். மிகக் குறைந்த அளவே ரசாயன உரம். தொழு உரத்தையும் உடன் பூமியில் இட்டு பாத்தி கட்டி விதை ஊன்றலாம். 85-90 நாட்களில் அறுவடை செய்தால் ஏக்கருக்கு வருமானம் ரூ 5000 முதல் ரூ 7000 வரை கிடைக்கும். விலை ஏறி இறங்காது. விற்பனை எளிது. இதர விவரங்களுக்குத் தமிழ் நாட்டில் ஆங்காங்கே உள்ள சக்தி சோயா நிறுவனத்தாருடன் தொடர்பு கொள்ளவும்.

- எம். ராமநாதன்,
கள உதவியாளர்,
சக்தி சோயா,
54, ஜெயா நகர்,
திருவள்ளூர்,
செங்கை - எம்.ஜி.ஆர். (மாவ)



# பாலம்

## பிரெஞ்சு
## தெரியுமா?

நான், ''முப்பது நாட்களில் பிரெஞ்சு பாஷை'' என்ற புத்தகத்தின் மூலமாக பிரெஞ்சு மொழி கற்று வருகிறேன். அதில் சில சந்தேகங்கள் ஏற்பட்டு என்னால் புரிந்து கொள்ள முடியாமலிருக்கிறது. அத னால் நன்றாக பிரெஞ்சு மொழி எழுத, பேசத் தெரிந்த அன்பர்கள் எனக்கு உதவி என் சந்தேகங்களைப் போக்குமாறு வேண்டுகிறேன்.

- அ. அக்பர் அலி ராஜா, ஆசிரியர்,
90சி, சோலைக்கிளி இல்லம்,
கேணிக்கரை,
இராமநாதபுரம் - 623 501.

## இதோ, வேலை வாய்ப்பு!

பிளஸ் டூ அல்லது புகுமுகம் படித்த வர்கள் நல்ல உடல் ஆரோக்கியத்துடன் இருந் தால், அவர்களுக்குத் தனியார் பாதுகாப்பு நிறுவனங்களில் வேலை வாய்ப்பு பெற்றுத் தருகிறோம். 25 முதல் 40 வயது உள்ள ஆண்கள் மட்டுமே தொடர்பு கொள்ளவும். எங்களுக்குக் கமிஷன் ஏதும் கொடுக்கத் தேவையில்லை.

- ஆர். கிருஷ்ணமூர்த்தி,
செக்யூரிடி கம்பெனீஸ்,
153, தம்பு செட்டி தெரு,
சென்னை - 600 001.

(பாலம் பகுதி மூலம் இணையும் வாசகர் களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிறு வனம் பொறுப்பேற்க இயலாது.)

☐ ரூ 25 பரிசு பெறுபவர் :
ஆர். வஸந்த் ராஜ்,
7B/1 E. B. சாலை,
தென்பாதி,
சீர்காழி - 609 111

● என். ஆர். சுப்பிரமணியன், பூனாம்பாளையம்.

*? கல்கி எப்போது சட்டசபை கூண்டில் ஏற்றப்படும்?*

! சட்டமன்றத்தின் நோக்கில் கல்கி குற்றம் இழைத்திருப்பதாகக் கருதப்படும் போது. அது சரி, உமக்கென்ன, அப்படி ஓர் ஆசை?

● ஆர். வஸந்த் ராஜ், சீர்காழி ☐

*? சட்டமன்றத்துக்கும் நீதிமன்றத்துக்கும் நடக்கும் போராட்டத்துக்கு முடிவு என்ன?*

! இதற்காகவே சிலர் சட்டமன்றத்தின் உரிமைகளை வரையறுத்துப் பட்டியலிட வேண்டும் என்கிறார்கள். ஆனால் இது ஒரு நல்ல உபாயமாக எனக்குத் தோன்றவில்லை. அப்படி வரையறுக்கும் போது இப்போதுள்ளதாகக் கருதப்படுவதை விட அதிகமான அதிகாரங்களைச் சட்டமன்றம் தனதாக்கிக் கொள்கிற அபாயம் உண்டு. எனவே, சட்டமன்றமும் நீதிமன்றமும் தனித்தனியே தனி அந்தஸ்துடன் செயல்பட்டு, நல்ல மரபுகள் உருவாவதுதான் சிறந்த வழி. அபரிமிதமான பெரும்பான்மையுடன் ஆட்சியில் அமரும் கட்சி, அதிகார மமதையின்றி, பெருந்தன்மையுடன் நடந்து கொள்வது அவசியம். பத்திரிகை சுதந்திரம், பொறுப்புணர்வுடன் இணைவது அதனினும் முக்கியம். நீதிமன்றங்கள் சுதந்திரமாக, அரசியல் தலையீடின்றி, சட்டத்தின் காவலர்களாகத் திகழ்வது எல்லாவற்றையும் விட அத்தியாவசியம்.




● எம். எம். கோபால், பம்பாய் - 18.

*? முதல் மூன்று பாகங்களுக்கு வர்மாவின் ஓவியங்கள் கிடைக்கவில்லையா? நான்காம் பாகத்துக்கு ம. செ. ஓவியங்கள் மறுக்கப்பட்டதேன்?*

! வர்மாவின் ஓவியங்கள் ஆரம்ப முதலே இல்லாமல் போகவில்லை. ஆனால் நவீன அச்சு வசதிகளைப் பயன்படுத்தி, வண்ணப் படங்களைத் தருவதுடன், ம.செ.யின் ஆற்றலையும் பயன்படுத்திக் கொள்ளலாமே என்ற ஆர்வம்தான் அவரை நாடியது. ஆனால் காலக்கெடுவோடு கூடிய ம.செ.யின் ஒத்துழைப்பு எங்களுக்கு மறுக்கப்பட்டதால் இடையில் ஒரு மாற்றம் செய்ய நேர்ந்திருக்கிறது.

● எஸ். ஹரிஹரன், இளமதுக்கூர்.

*? பிரதமர் நரசிம்மராவை 'மிஸ்டர் கிளீன்' என்று அழைக்கலாமா?*

! எதற்கு லார் செயின்ட் கிட்ஸ் விவகாரமெல்லாம் இப்ப ஞாபகப்படுத்திக் கொண்டு... இப்போதைக்கு ஆட்சியில் இருக்கும் அவர் மீது பிரமாதமாகக் குறை கூறும்படி ஏதுமில்லை... நாளை எப்படியோ?

● ரா. நாச்சிமுத்து, போடிநாயக்கனூர்.

*? 'தமிழகத்தில் கள் சாராயக் கடைகளை மீண்டும் திறக்க வேண்டும்' என காங்கிரஸ் எம். எல். ஏ. ஒருவர் கோரிக்கை விடுத்திருக்கிறாரே...?*

! ஒயின் ஷாப்புகளை 2000, 3000, 5000 என்று அதிகப்படுத்திக் கொண்டே போய், பார் வைக்கவும் அனுமதி அளித்து, கிராமப்புறங்களுக்கும் அவற்றைப் பரவச் செய்வதை விட, காங்கிரஸ் எம்.எல்.ஏ. யோசனை எவ்வளவோ மேல்!

● சிந்துகுமார், திருவட்டார்.

*? குழந்தைப்பேறு இல்லாதவர்களுக்காக நடத்திய புத்திர காமேஷ்டி யாகத்தை விஞ்ஞானத்துடன் சம்பந்தப்படுத்தலாமா?*

! மூடநம்பிக்கையோடு தொடர்புபடுத்தலாம். புராண இதிகாசங்களிலும் சாஸ்திரங்களிலும் கூறப்பட்டிருக்கும் எத்தனையோ விஷயங்களில் காலத்துக்கு ஏற்ற நல்ல கருத்துக்கள் ஏராளமாய் உள்ளன. அவற்றை ஏற்று தேவையற்றவற்றை ஒதுக்குவதே புத்திசாலித்தனம். பகுத்தறிவு என்பது இதுதான்.

● ஜ. எஸ். வாசு, மாடம்பிள்ளைதர்மம்.

*? வீரப்பன், ராஜாராம் இருவரையும் கட்சிப் பொறுப்பிலிருந்தும் நீக்கி விட்ட 'ஜெ'யின் துணிச்சல் பற்றி?*

! அது ஒருவேளை துணிச்சலாகவே இருக்கலாம்; ஆனால், 'எம்.ஜி.ஆர். படம் எங்கே? மேடையில் வைக்க வேண்டாமா?' என்று கேட்ட சாதா பெண் உறுப்பினர்களை அப்படி கேட்டதற்காக அ. இ. மு. க. கட்சியை விட்டே நீக்கியது 'ஜெ'





# நீங்கள் கேட்டவை

## - தராசு









கட்சிப் பொறுப்பு...

யின் வீரமாகத் தென்படவில்லை; கோழைத்தனமாகவே தோன்றுகிறது.

● எம். பிரபு, குமராட்சி.

*? சமீப காலமாக உங்கள் மனத்தை உறுத்தும் செய்தி எது?*

! 'தலைவி எவ்வழி அவ்வழி தொண்டர்கள்' என்பது போல, 'ஜெ'க்குத்தான் சகிப்புத் தன்மை குறைவாக இருக்கிறது என்று பார்த்தால், தொண்டர்களும் அப்படியே நடந்து கொள்வது ரொம்பத்தான் மனசை உறுத்துகிறது. முசிறியில் கே. பி. ராமலிங்கம் மேடை ஏறவும் நடந்த அமளியைத் தொடர்ந்து, திருநாவுக்கரசு கூட்டத்தில் திராவக வீச்சு ஜனநாயகத்தின் ஜீவனையே ஒடுக்குவதாக உள்ளது. முதல்வர் இதையெல்லாம் கண்டும் காணாதது போல் இராமல், கண்டித்தால்தான் நல்லது. இல்லையெனில் அராஜகமாக உருமாற அதிக நாள் ஆகாது.

● எஸ். பிரியா, பாளையங்கோட்டை.

*? பழனி இடைத் தேர்தல் ஒத்திவைப்பு அவசியமா?*

! வறட்சி மீது பழியைப் போட்டு ஒத்தி வைத்து விட்டார்கள். ஏற்க இயலாத காரணம். தேவையற்ற ஒத்திவைப்பு. மக்கள் உரிமை மறுக்கப்படுவதாகவே அர்த்தம். ஆட்சியில் உள்ளோர் மீது தற்போது அதிருப்தி மக்களிடம் வளர்ந்திருப்பதை காங்கிரஸ் - அ.தி.மு.க. கூட்டணி உணர்ந்திருக்கிறது. இந்த நிலைமை நாளை ஏதோ மாயாஜாலம் போல் மாறி விடாது. மேலும் அதிகரித்தால் வியப்பதற்கில்லை. வெற்றியோ, தோல்வியோ தைரியமாகக் களத்தில் இறங்க வேண்டும்.

● எம். சந்திரசேகர், மேட்டுமகாதானபுரம்.

*? முதல்வரின் அட்டி விஜயம் பற்றி...?*

! சில சாலைகள் சீர்ப்படும்.

● கே. எம். சிங்காரவேலன், கரடிப்பட்டி.

*? இந்தியாவின் அடுத்த ஜனாதிபதி ஒரு தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவராமே...?*

! தாழ்த்தப்பட்டவரா என்பதை விடத் தகுதி உள்ளவரா என்பதே முக்கியம். தகுதி உள்ளவராகக் கிடைத்து, தாழ்த்தப்பட்டவராகவும் இருந்தால் 'வேண்டாம்' என்று யாரும் கூறப் போவதில்லை. இந்த ஒரு பதவிக்காவது வேண்டாமே, இட ஒதுக்கீடு!

● எம். குணசேகரன், வேலாயுதம் பாளையம்.

*? தி. மு. க. நிர்வாகிகள் தேர்தலில் 'உளவுத் துறை தலையிடுகிறது' என கருணாநிதி குற்றம்சாட்டியுள்ளாரே?*

! 'சறுக்கியது சாக்கு' கதைதான். உட்கட்சி பூசல்களைக் கட்டுப்படுத்தி, கட்சிக்காரர்களை அமைதியாகத் தேர்தலை நடத்துமாறு செய்யக்கூடிய செல்வாக்கு, தலைமைக்குக் குறைந்து வரும் போது, வேறு ஏதாவது காரணம் கண்டுபிடித்துக் கூறியாக வேண்டுமே!

● பா. சிவகுமார், குஞ்சரம்.

*? புதியதொரு தத்துவம் சொல்லுங்கள், பார்ப்போம்!*

! பி. ஜே. பி. யின் புதிய தத்துவம் - சுதேசி கோஷம் - புதிதில்லையாயினும் புதுப்பிக்கப்பட்ட காந்தீயத் தத்துவமே. அதனை முழு மனத்துடன் வரவேற்கலாம். 'ஹிந்துத்துவம்' என்ற தத்துவத்தை விட்டுவிட்டு, 'சுதேசியம்' தத்துவத்தைப் பிடித்துக் கொண்டால் அனைத்து மக்களிடையேயும் ஒரு எழுச்சியை உருவாக்க வாய்ப்புண்டு. ஒருமைப்பாடு உணர்வு, தொழில் முன்னேற்றம், சுயகௌரவம், பொருளாதாரச் சிறப்பு போன்ற பலவும் 'சுதேசியம்' என்ற தத்துவத்துக்குள் அடங்கும். இது ஒரு பாஸிடிவ் சிந்தனை. முழு மனத்துடன் பாராட்டலாம்.

வட்டமேஜை

# மண் பானையை மறந்ததேன்?

◆ ஜில் ஸ்பெஷல் முழுவதும் கோடைக்கு இத மளிக்கும் அருமையான, உபயோகமான துணுக்குத் தகவல்கள்.

அரசரடி, நெல்லை சிவா.

◆ கோடை காலத்திற்குப் பயனுள்ள குறிப்புக் களை வீட்டில் வளர்க்கும் செல்லப் பிராணிகளுக் கும் கொடுத்த உம்மைப் பாராட்டாமல் இருக்க முடியாது.

மதுரை - 10, பி. ராஜசேகரன்.

◆ தொகுதி பக்கமே தலைவைத்துப் படுக்காத, எம்.எல்.ஏக்களுக்கு சன் கன்ட்ரோல் ஃபிலிம் பொருத்திய கார்கள், மிகவும் உறுதுணையாக இருக்கும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை!

கும்பகோணம், கணேசமூர்த்தி.

◆ கார்கள் மாட்டிக் கொள்ளும் கறுப்புக் கண்ணாடி முதல், வீட்டிலே செய்யலாம் வித்தியாசமான கூல்ட்ரிங்க்ஸ் வரையிலான அனைத்து ஜில் சங்கதிகளும் அருமை சார்!

தோட்டக்குறிச்சி, இரா. வளையாபதி.

◆ கல்கியின் ஜில் ஸ்பெஷல் இந்தக் கோடையில் சில்லென்று ஐஸ் மோர் குடித்த திருப்தியைத் தந்தது.

களியல், அன்பின் செபா.

◆ 'ஜில் ஜில்' என்றதுமே உங்கள் நினைவுக்கு ஃப்ரிஜ் மட்டும்தானா வந்தது. குளிர்ந்த நீருக்கு உதவும் மண்பாண்டங்களைப் பற்றியும் குறிப்புக் கள் போட்டிருக்கலாமே!

தக்கலை, லீலா இராம்.

◆ ''அட்டைப் படத்திலுள்ள நீர்த் தொட்டியின் சிறப்புக்களை விவரித்து, அதன் மேல் ஒரு ஈடு பாட்டை ஏற்படுத்திய நீங்கள், அது கிடைப்பது வெளிநாட்டில் என்று கூறி வெறுப்பேற்றி விட்டீர் களே, நியாயமா?''

கவுந்தப்பாடி, த. குணசேகரன்.

◆ 'என்னைக் காணவில்லை...!' எல். ஆர். ஜே. கதையில் எவ்வளவு அழுத்தமான மனக்குமுறல்! இருந்தாலும் தோற்று விட்டதே, பெண்மை! காரணம் மணக்கோலம்தான் மாட்டுச் சந்தையாகி விட்டதே! குமுறி என்ன கொந்தளித்து என்ன, எல்லாமே வேஸ்ட். இரிமினல் வேஸ்ட்! எத்தனை நூற்றாண்டானாலும் திருத்த முடியாத நாடு.

பாண்டிச்சேரி, தா. செல்வராசன்.

◆ அனைத்துச் சிறுகதைகளும் அருமையாக அமைந்திருந்தன. அதிலும், பிரதிபா ராஜகோபாலன் எழுதிய ''அர்சாரம்'' சிறுகதை காலநிலைக் குப் பொருத்தமாக அமைந்த கருத்துப் பெட்டகமாகும்.

காட்டூர், எஸ். அருள்மொழி.

◆ சிவகாமியின் சபதம் நான்காம் பாகம் - சிதைந்து கனவு மட்டுமல்ல. எங்கள் எதிர்பார்ப்புகளும் தான். ஒவ்வொரு வாரமும் ம. செ.யின் கைவண்ணத்தில் ஜொலித்து வந்த தொடர், இந்த இதழ் முதல், மங்கலான வெளிச்சத்தில் இருப்பது போன்று இருக்கிறது. இருப்பினும் உங்கள் கோரிக் கையை ஜீரணித்துக் கொள்கிறோம்.

கரூர், எம். தனபாலன்.

◆ 'ம.செ.'யின் ஓவியங்கள், சிவகாமியின் சபதத் தைத் திரைப்படமாய் எங்கள் முன் ஓட விட்ட தென்றால், வர்மாவின் ஓவியங்கள் எங்களைக் கதை நடந்த கால கட்டத்திற்கே அழைத்துச் செல்கின்றன! இது மிகையல்ல! என் போன்ற இளையதலைமுறையினருக்கு, வர்மாவின் ஓவி யங்களோடு, கல்கியின் எழுத்தாற்றலை இணைத்து அனுபவிப்பது, ஒரு சுகானுபவம்; வரப்பிரசாதம். நன்றிகள் பல!

சென்னை - 80, ''ஸ்ரீ'' மகுடப்பிரியன்.

◆ சிவகாமியின் சபதம் சித்திர மாறுதல் என்னை மிகவும் கவர்ந்தது. முதன் முதல் அத் தொடர்கதை வெளியான போது, இதே சித்திரங்களை முன்பு ரசித்திருந்தேன். இப்போது, மறுபடி வரும் இச் சித்திரம், பழைய கால கல்கியின் நினைவுகளை மீண்டும் அசைபோட வைத்து விட்டது. மகிழ்ச்சி தருகிறது எனக்கு.

பெங்களூர், என். கே. சகவரி.

◆ சத்தியமூர்த்தி மக்களாட்சி பயிற்சி மையம் ஜூன் 1 முதல் ஜூன் 7 வரை மாலை 5.30 முதல் 7.30 வரை கோடைக்கால பயிற்சிப் பள்ளி நடத்த விருக்கிறது. எழுத்திலும் சொல்லிலும் வல்ல சத்தியமூர்த்தியின் மரபில் இளைஞர்களைப் பயிற்றுவிக்கும் முயற்சி இது. தலைசிறந்த எழுத் தாளர்களும் பேச்சாளர்களும் வகுப்பு நடத்த இசைந்துள்ளார்கள். விவரங்கட்கு நேரடியாகவோ தபால் மூலமாகவோ கீழ்க்கண்ட முகவரியில் தொடர்பு கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம் :

சத்தியமூர்த்தி மக்களாட்சி பயிற்சி மையம்,
எண். 5, இரண்டாவது பிரதான சாலை,
தேரு நகர், அடையாறு,
சென்னை - 20.

லக்ஷ்மி கிருஷ்ணமூர்த்தி,
நிர்வாக அறங்காவலர்.



ஸ்ரீபெரும் புதூர் குண்டு விபத்தில் ராஜீவ் காந்தி மரணமடைந்த தினத்திலிருந்து, அவர் குடும்பத்தினரைப் பற்றி ஆரம்பமான வதந்திகள் இன்று வரை ஓய்ந்த பாடில்லை. சோனியா காந்தி அல்லது அவர் மகள் பிரியங்கா அரசியலில் நுழைவாரா என்பது பற்றிய ஊகங்கள், புரளிகளுக்குக் குறைவேயில்லை. சென்ற மாதம் திருப்பதியில் நடைபெற்ற காங்கிரஸ் மகா நாட்டிற்கு, சோனியா காந்தி வருவார் என்று ஒரு சிலர் எதிர்பார்த்தனர். வேறு சிலரோ, மே 21ஆம் தேதிக்குள் - அதாவது ராஜீவ் காந்தி இறந்து ஓராண்டு பூர்த்தி ஆவதற்குள் - அவசர அவசரமாகக் காங்கிரஸ் மகா நாட்டை நடத்த வேண்டிய அவசியமென்ன என்று ஆராய்ந்தனர். சோனியாஜி, அர

டிய தகவல்கள், புகைப்படங்கள் முதலியவற்றைத் திரட்டி வருகிறார் சோனியா. இதற்காக ராஜீவ் காந்தியுடன் சம்பந்தப்பட்ட உள்நாட்டு, வெளிநாட்டுப் பிரமுகர்களுக்குக் கடிதம் எழுதுவது போன்ற காரியங்களைச் செய்து வந்திருக்கிறார். ராஜீவ் காந்தியின் பிறந்த தினமான ஆகஸ்ட் 20 ஆம் தேதியன்று ராஜீவின் வாழ்க்கை வரலாறு புத்தகம் வெளியிடப்படும் என்று தெரிகிறது.

# நினைவுகளில் நிறைவு காணும் சோனியா

சியலில் நுழைவாரோ இல்லையோ தெரியாது; ஆனால் கடந்த ஓராண்டு காலமாக நம்பர் 10, ஜன்பத் வீட்டை விட்டு வெளி உலகில் அதிகம் தலைகாட்டாதவர், மே 21 ஆம் தேதிக்குப் பிறகு ஜவஹர் பவன் அலுவலகத்தில் அமர்ந்து, Rajiv Gandhi Foundation வேலைகளைக் கவனிப்பார் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

இதுவரை சோகக் கடலில் மூழ்கிக் கிடந்த சோனியா காந்தி, கடந்த சில மாதங்களாக மனத்தைத் திசை திருப்பும் முயற்சியில், Freedom's Daughter: Letters Between Indira Gandhi and Jawaharlal Nehru 1922-1939, புத்தகத்தின் இரண்டாம் பாகத்தைத் தொகுப்பதில் முனைந்திருக்கிறார்.

சமீப காலமாக ராஜீவ் காந்தியின் வாழ்க்கை வரலாறு எழுதுவதற்கு வேண்

ராஜீவ் காந்தி அறக்கட்டளையின் தலைவர் என்ற வகையில் பல வேலைகளையும் கவனிக்கும் சோனியா, இதன் கிளை ஸ்தாபனமான Institute of Contemporary Studies மூலமாகப் பல ஆராய்ச்சித் திட்டங்களைத் தொடங்கியுள்ளார். ராஜீவ் காந்தி அறக்கட்டளைக்கு இது வரையில் 10 கோடி ரூபாய் வரையில் நன்கொடைகள் குவிந்துள்ளன.

மகன் ராகுல் அமெரிக்கப் பல்கலைக் கழகம் ஒன்றில் மேற்படிப்பு படித்துக் கொண்டிருந்தாலும், அவ்வப்போது தாய் நாட்டிற்கு வந்து போய்க் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. மகள் பிரியங்கா, சாணக்கியபுரியிலுள்ள ஜீஸஸ் அண்டு மேரி கல்லூரியில் பி.ஏ. ஆனர்ஸ் இறுதியாண்டில் படிக்கிறாள்.



— அநுராஜு

# கேரமில் கோப்பை; படிப்பில் கோட்டை!



— மரிய இருதயம்

உலகிலேயே மிகச் சிறந்த கேரம் ஆட்டக்காரர் யார் தெரியுமா? தமிழ் நாட்டைச் சேர்ந்த ஏ. மரிய இருதயம்தான். தில்லியில் நடந்த அகில உலக கேரம் சேம்பியன்ஷிப் போட்டிகளில் இவர் ஆண்கள் ஒற்றையர், இரட்டையர், மற்றும் ஆண்கள் டீம் சாம்பியன் ஷிப்களில் இந்தியாவுக்கு முதலிடத்தைப் பெற்றுத் தந்தார். இந்தியன் ஏர்லைன்ஸில் பணிபுரியும் மரியத்துக்கு ஆரம்ப காலத்தில் ஈடுபாடு இருந்தது கால் பந்தாட்டத்தில் தானாம். கேரம் ஆட்டமும் இந்தியாவும் செய்த அதிர்ஷ்டம், இவர் கவனம் கேரம் பக்கம் திரும்பியது. விளைவு: கேரமில் கோப்பை; படிப்பில் கோட்டை!

மரிய இருதயத்துடன் சேர்ந்து ஆண்கள் இரட்டையர் போட்டியில் ஆடி வென்றவரும் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்தான்: ஆரோக்கிய ராஜ்.

கேரமில் பெண்கள் விஷயம் எப்படி? அகில உலகப் பெண் சாம்பியன் என்ற பெருமைக்கு உரியவரும் சென்னைவாசிதான்: அநுராஜு; வயது 39, பாதுகாப்புத் துறையில் முதுநிலை ஆடிட்டர்.

கேரம் விளையாட்டு இந்தியாவில் தான் தோன்றி, அயல் நாடுகளுக்கும் பரவி, படிப்படியாகப் பல முன்னேற்றங்களை அடைந்தது என்பது இன்று உலகம் முழுவதும் ஏற்றுக் கொள்ளப்படுகிற கருத்து. ஒலிம்பிக் விளையாட்டுக்களில் ஒன்றாக இது ஏற்கப்பட முயற்சிகள் நடக்கின்றன. முயற்சி வென்றால் நமக்கு ஒரு தங்கம் உறுதி?

— ஜூலி

படங்கள் : உத்ரா

---

தமது மாபெரும் இழப்பிலும், துக்கத்திலும் ராஜீவ் காந்தியுடன் உயிர் இழந்த அவர் மெய்க்காவலர் பிரதீப் குமார் குப்தாவின் குடும்பத்தை சோனியா காந்தி மறந்து போய் விடவில்லை. பிரதீப் குப்தாவின் இறுதிச் சடங்கில் பங்கு பெற, மகன் ராகுலை அனுப்பி வைத்த சோனியா, அதற்குப் பிறகும் அவ்வப்பொழுது பிரதீப் குப்தாவின் மனைவி நமிதாவுடன் தொடர்பு கொண்டு ஆறுதல் அளித்து வந்திருக்கிறார். சோனியா காந்தி மற்றும் வி. ஜார்ஜின் உதவியுடன் நஷ்டஈடாகக் கிடைக்க வேண்டிய தொகையை அதிகத் தாமதமின்றிப் பெற்றதோடல்லாமல், ஃப்ரீதாபாதில் ஒரு காஸ் ஏஜென்ஸியும், ஹரியானா அரசிடமிருந்து அதற்காக நிலமும் கிடைக்கப் பெற்றதை நன்றியுடன் குறிப்பிடுகிறார், பிரதீப் குப்தாவின் மனைவி நமிதா.

ராஜீவ் காந்தி குடும்பத்தினர் வசிக்கும், கோட்டை போலத் தோற்றமளிக்கும் பங்களாவுக்குள் சுலபத்தில் ஒருவரும் நுழைந்து விட முடியாது. போலீஸ் கெடுபிடி தவிர மற்றபடி பங்களா பரபரப்பு ஒன்றும் இல்லாமல் அமைதியாகவே காணப்படுகிறது. இந்தப் பங்களாவின் மற்றொரு பகுதியில், லால்பகதூர் சாஸ்திரியின் குடும்பத்தினர் வசிக்கிறார்கள்.

— ரமாமணி சுந்தர்

---

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை – 600 032. தொலைபேசி – ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் – சந்தா : 2345622, டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா – உள்நாடு : ரூ. 156/–; வெளிநாடு – கப்பல் தபால் : ரூ. 400/–; விமானத் தபால் ரூ. 1050/–.
ஆறு மாதச் சந்தா – உள்நாடு : ரூ. 78/–; வெளிநாடு – கப்பல் தபால் ரூ. 200/–; விமானத் தபால் ரூ. 525/–.

# கோத்ரெஜ் டொமாட்டோ ப்யூரி கொண்டு நீங்கள் விதவிதமாய் சமைத்து ருசிக்கலாம்.

வளமை ததும்பியது. அடர்த்தியானது. உங்களுடைய சமையல் அனைத்திலும் எளிதில் கலந்துவிடுகிறது.





சிக்கன் மகானி, டிங்கிரி மட்டர், ஸாண்ட்விச், சூப், சாஸ், மட்டன் விண்டாலு, ஆலு பாஜி, கோவா கறி, ஆலு மட்டர், சென்னா மஸாலா, பிஸ்ஸா, சட்னி, டால் ஃப்ரை, மலாய் கோஃப்தா, சாம்பார், பாவ் பாஜி, பைங்கன் பர்த்தா, ஜூஸ், பெண்டி மஸாலா, ஃபிஷ் பட்டியா, ஆலு மெய்த்தி, மிஸல் பாவ், டொமாட்டோ ஃப்ரை, கறி, நவரத்தன் கொர்மா, மட்டன் கிரேவி, ரஸம், டால், ஆம்லெட், சிக்கன் கோலாப்பூரி, பிரான் மஸாலா, மட்டன் பிரியாணி, ஸர்ஸோன் கா ஸாக், மக்கி கோபி, புர்ஜி, புலாவ், ரோகன் ஜோஷ், ஆலு சிம்லா மிர்ச்.



1 பேக் = ½ கிலோ தக்காளி



2 மேசைக் கரண்டி = 1 நடுத்தர சைஸ் தக்காளி




உங்களுடைய சமையலில் ம்ம்ம்... இன்னும் சுவை சேர்க்கும்.

Enterprise/GFL/427Tm

அழகொளிரும் மேனி. ஸிந்தால் சாண்டல் மேனி.

இப்போது நீங்கள் ஸிந்தால் சாண்டல் மூலம் பெற்றிடலாம் குறைபாடற்ற, மாசிலா மேனியை. ஸிந்தாலில் மட்டுமே உண்டு – மேனியில் மாசு மற்றும் துர்நாற்றத்தை உண்டாக்கும் பாக்டீரியாவை அழிப்பதற்கான TCC. மென்மையான, அழகொளிரும் மேனிக்கு தொன்றுதொட்டு பயன்படுத்தப்பட்டுவரும் சந்தனத்தின் நன்மைகள்.

**இன்றைய நங்கையர்க்கான இன்றைய சாண்டல் சோப்.**




Madison-G-366

REGISTERED NO. M. 4392